# வெள்ளையரின் உள்ளங்களை மாற்றிய கறுப்பு நாவல்கள்!



**அமெரிக்க முன்னணி எழுத்தாளர் ஆல் யங் கல்கிக்கு அளித்த சிறப்புப் பேட்டி:**

● இந்தியாவுக்கு வர உங்களை ஈர்த்தது எது?

●● இருபத்தாறு ஆண்டுகளாகத் தியானம் பழகி வருகிறேன். இந்திய வேதாந்த தத்துவங்களில், ஆன்மிகத்தில், எனக்கு ஆழ்ந்த ஈடுபாடு. இந்த நாட்டுக்கு வர வேண்டும் என்ற ஆசை நெடுங்காலமாக உண்டு. அமெரிக்கத் தகவல் தொடர்பு சேவை அமைப்பின் (USIS) உதவியால் அந்த ஆசை நிறைவேறியுள்ளது.

● உங்கள் கட்டுரை ஒன்றில் "எனது ஆன்மிகத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளவே நான் எழுதுகிறேன். எழுதுவதை ஒரு தெய்வீக அனுபவமாகக் கருதுகிறேன். ஒன்பது வயது முதலே அது என் வாழ்க்கையின் இன்றியமையாத அம்சமாக இருந்து வருகிறது..." என்று நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். வாழ்க்கையின் எந்தக் கட்டத்தில் எழுத்தைத் தெய்வீக அனுபவமாகக் கருத ஆரம்பித்தீர்கள்?

●● எனது மூன்றாவது வயதிலேயே என்னால் புத்தகங்களைப் படிக்க முடிந்தது. பள்ளியில் சக மாணவர்கள் எழுத்துக்கள் கற்றுக் கொண்ட போது ஆசிரியர்கள் என் கையில் ஒரு புத்தகத்தைக் கொடுத்து என்னைத் தனியே உட்கார வைத்து விடுவார்கள்! அச்சான எழுத்துடன் எனது உறவு இவ்வாறு மிகச் சிறு வயதிலேயே ஆரம்பித்தது. நான் பிறந்து வளர்ந்தது அமெரிக்காவின் தென்பகுதி கிராமம் ஒன்றில். அங்கு மின்சாரம் கிடையாது; குழாயைத் திறந்தால் தண்ணீர் பெறுவது போன்ற நவீன வசதிகள் கிடையாது. ஆனால் வாய்மொழியாகக் கதைகளும் பாடல்களும் சொல்லி, பாடி மகிழும் வளமான பாரம்பரியம் எங்களுக்கு இருந்தது. புத்தகங்களைப் படித்த போதும் சரி, பாரம்பரியப் பாடல், கதைகளைக் கேட்டபோதும் சரி, நாம் இருக்கின்ற உலகத்திலிருந்து நம்மை வேறொரு உலகுக்குக் கடத்திச் செல்லும் சக்தி வார்த்தைகளுக்கும் எழுத்துக்கும் இருப்பதை நான் உணர ஆரம்பித்தேன். சிறு வயதில் எழுத்தின் 'மந்திர சக்தி' என்று இதனை எண்ணிய நான் சற்று வளர்ந்ததும்— சுமார் பதினொரு பன்னிரண்டு வயதில் — இலக்கியத்தை ஆன்மிக அனுபவமாக அடையாளம் கண்டு கொண்டேன்.

● இசையில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டுள்ள நீங்கள், இலக்கியத்தைப் போன்றே இசைக்கும் ஆன்மிக சக்தி இருப்பதை ஏற்கிறீர்களா?

●● கட்டாயமாக. ஆஃப்ரோ — அமெரிக்க (நீக்ரோ) பாரம்பரியத்தில் இசையும் பாடல்களும் இலக்கியத்தின் ஒரு பகுதிதான். செவி வழிப் பாடல்களும் இசையும் எங்கள் இலக்கியத்திலிருந்து பிரிக்கப்பட முடியாதவை. நீக்ரோ பாதிரியார்கள் பிரார்த்தனைக் கூட்டம் நடத்துவதைப் பார்த்தாலே இது புரியும். வெறும் பேச்சாக அது இருக்காது. இசையும் லயமும் கலந்த சொற்பொழிவாக இருக்கும். இடையிடையே பார்வையாளர்களிடமிருந்தும் ஆமோதிப்புக் குரல்கள் எழும்...

● நீங்கள் எழுதிய நாவலை 'black novel' (கறுப்பு நாவல்) என்று ஒரு விமர்சகர் குறிப்



**தமது கவிதைகள், நாவல்கள், கட்டுரைகள் மூலம் அமெரிக்க இலக்கியத்துக்கு வளம் சேர்த்து வரும் ஆல் யங் (Al Young) எழுத்துக்கலை பயில்விக்கும் ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார். 'ஜாஸ்' இசையில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். 'உடலுக்குள் கட்டுண்ட ஆன்மாவின் விடுதலைவேட்கைநிரம்பிய குரலே இசை' என்று நம்புபவர். எளிய கறுப்பர்கள் குடும்பத்தில் பிறந்து (தந்தை ஒரு கார் மெக்கானிக்) வளர்ந்து, வளர்ளராகச் சென்று தம் வாழ்க்கைக்குப் பல வளங்களைச் சேர்த்துக் கொண்டார்.**

பிட்டுள்ளார். நாவல்களை ஏன் இப்படி இனம் பிரிக்கிறார்கள்?

●● என் நாவலைக் கறுப்பு நாவல் என்று அங்கீகரித்ததற்காக நான் மகிழ வேண்டும்... கறுப்பு நாவல் என்று அவர்கள் குறிப்பிடுவது, நிறபேத உணர்வினால் புண்பட்டுப் போன கறுப்பர்கள் தங்கள் கோபத்தை, ஆற்றாமையைக் கொட்டித் தீர்க்கும் எழுத்துக்களைத்தான். ஆரம்ப எழுத்துக்களில் நான் அவ்வாறு கோபமாக, வேகமாக எழுதவில்லை என்பதற்காக என்னைக் கடுமையாக விமர்சித்தார்கள். கறுப்பர்களின் கலாசாரம், பேச்சு வழக்கு போன்றவை என் எழுத்துக்களில் போதுமான அளவு காணப்படவில்லை என்றார்கள்... இப்போது என் நாவலைக் 'கறுப்பு நாவல்' என்று ஏற்கிறார்கள்.

● உங்கள் எழுத்து மாறியிருக்கிறது என்று அர்த்தமா...?

●● நானோ என் எழுத்தோ மாறவில்லை. சூழ்நிலைதான் மாறியிருக்கிறது. கறுப்பர்கள் என்றாலே அவர்கள் கோபத்தில் கொதித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று எதிர்பார்த்த காலம் மாறியிருக்கிறது. கறுப்பர்களின் சம உரிமை (Civil rights) இயக்கத்தின் போது இந்தக் கோபம் துளிர்த்து உச்சக்கட்டத்தை அடைந்தது. அந்தச் சமயத்தில் 'கறுப்பு நாவல்கள்' நிறைய விலை போயின. அவற்றை வாங்கிப் படிப்பதன் மூலம் வெள்ளையர்கள் தங்கள் குற்ற உணர்வை ஓரளவு தணித்துக் கொள்ள முடிந்ததே இதற்குக் காரணம். ஆனால் இந்தப் போக்கினால் ஒரு தீமையும் விளைந்தது: உண்மையான கோபமும் வேகமும் இல்லாத, போலி உணர்வுகளைக் கொண்ட 'கறுப்பு நாவல்கள்' பல எழுதப்பட்டன. அவ்வாறு எழுதுவது ஒரு ஃபாஷனாகி விட்டது.

● கறுப்பர்களின் கோபம் தங்கள் குற்ற உணர்வைத் தணித்தது என்பதை வெள்ளையர்கள் ஒப்புக் கொள்கிறார்களா?

●● கறுப்பர்களின் இயக்கம் வெள்ளையர்களைச் சிந்திக்கச் செய்தது. கறுப்பர்களின் வேகமும் கோபமும் கண்டு தங்கள் தவறை (நிறபேத உணர்வை) அவர்கள் உணர்ந்தார்கள். கறுப்பர்களுக்குத் தனி வேலை வாய்ப்புக்கள், இடஒதுக்கீடுகள் எல்லாம் செய்து தரப்பட வேண்டும் என்று மனப்பூர்வமாக உணர்ந்து ஒப்புக் கொண்டார்கள். ஆனால், குற்ற உணர்வின் பயனாக விளையும் சமூக மாற்றங்கள் ரொம்பக் காலத்துக்கு நீடிக்க முடியாது. ஏனென்றால் குற்ற உணர்வு என்பது நிலையற்ற மனித இயல்பு. இப்போது இந்தியாவில் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் என்று கருதப்படுவோருக்குச் சலுகைகள் அளிக்கப்படுவதை எதிர்த்து இயக்கங்கள் கிளம்பியுள்ளதைப் போல் அமெரிக்காவிலும் கறுப்பர்களுக்குச் சலுகைகள் வழங்குவதைப் பல வெள்ளையர்கள் எதிர்க்க ஆரம்பித்திருக்கிறார்கள். முன்னேறுவதற்கு உங்களுக்குப் போதுமான அளவு அவகாசம் அளித்து விட்டோம்; இனி சமத்துவமும் சம வாய்ப்பும்தான் என்கிறார்கள்... இப்போது எழுதப்படும் அமெரிக்க கறுப்பு நாவல்கள் இந்தப் பிரச்னையை மையமாகக் கொண்டுள்ளன. இவற்றை நிறையப் பெண்கள் எழுதுகிறார்கள். அமெரிக்காவில் கதைப் புத்தகங்களை நிறைய வாங்குவோரும் பெண்களே... ஆனால் இந்தப் போக்குகளுக்கு ஏற்ப என் எழுத்தை மாற்றிக் கொள்ளாமல் என் பாணியில் நான் எழுதி வருகிறேன். என் புத்தகங்கள் விற்பனையில் சரித்திரம் படைக்காவிட்டாலும் தொடர்ந்து விற்றுக் கொண்டிருக்கின்றன... சில சமயம் அவற்றைப் படிப்பது ஃபாஷனாக இருக்கும் சில சமயங்களில் இருக்காது...!

● உங்கள் கட்டுரை ஒன்றில் 'நான் மகிழ்ச்சிக்கு அடிமையாகி இருக்கிறேன்' (I am a happiness addict) என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். இதைச் சற்று விளக்க முடியுமா...?

●● துக்கம், கஷ்டம், துயரம் — இவைதான் வாழ்வின் நிலையான உண்மைகள் என்று மனிதன் நம்புகிறான். துக்கத்துக்கு அடிமை

யாகிறான். அதையே விரும்பவும் ஆரம்பிக்கிறான். இதனால்தான் வாழ்க்கையில் போராட்டங்கள். ஆனால் மனித குலத்தில் ஒவ்வொருவருக்குள்ளும் ஆனந்தம் குடிகொண்டிருக்கிறது. உடலின் இயக்கங்களை ஓய்வுறச் செய்து மனத்தையும் பிடித்து நிறுத்தித் தியானத்தில் ஈடுபடும் போது உள்ளுக்குள் இந்த ஆனந்தம் சுரப்பதை உணரலாம். இவ்வாறு தியானம் பழகியதால் தான் என் வாழ்க்கையில் அடுத்தடுத்து வந்த பல துன்பங்களை நான் துணிவுடன் சந்திக்க முடிந்தது என்று கருதுகிறேன். என் அம்மா கான்ஸர் வந்து இறந்து போனார்; என் மனைவிக்குக் கான்ஸர் வந்தது; என் சகோதரன் தற்கொலை செய்து கொண்டான்; என் மணவாழ்க்கை தவிடுபொடியாகிக் கொண்டிருந்தது.... இந்த நிகழ்வுகளெல்லாம் என்னைத் தனிப்பட்ட முறையில் பாதிக்கவே விதிக்கப்பட்டவை என்று கருத நான் மறுத்தேன். இதற்கான பலத்தைத் தியானம்தான் எனக்கு அளித்ததாகக் கருதுகிறேன். தியானம் அளிக்கும் ஆனந்தத்துக்கு நான் அடிமையாகிப் போகிறேன்.

● பள்ளிச் சிறுவர்களுக்குப் பாடம் நடத்திய உங்கள் அனுபவத்தை எழுதுகையில் கற்பனை வளத்தை நமது கல்வி முறை போஷிப்பதில்லை என்று குறைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இந்தியாவில் மட்டுமே இந்த நிலை என்று நாங்கள் கருதினோம். அமெரிக்காவில் கூடவா கல்வி முறையில் கற்பனை வறட்சி...?

●● அமெரிக்காவிலும் இந்தப் பிரச்னை இருக்கிறது. அதுவும் இயந்திர யுகம் ஆரம்பித்த பிறகு மனித உழைப்புக்கும் மூளைக்கும் மவுசு குறைந்து வருகிறது. ஏழை பணக்காரர்களுக்கிடையேயான இடைவெளி அதிகரித்து வருகிறது. இந்தச் சூழ்நிலையைச் சமாளிக்கும் வகையில் கல்வித் திட்டங்கள் வகுக்கப்பட்டு நெறிமுறைப் படுத்தப்படவில்லை. கல்லூரிப் படிப்பில் இளைய தலைமுறையினருக்கு நம்பிக்கை இல்லை. 'நான்கு வருட கல்லூரிப் படிப்பால் கிடைக்காதது ஆறு மாத கம்ப்யூட்டர் பயிற்சியில் கிடைக்கும் எங்கள் கம்ப்யூட்டர் வகுப்பில் சேருங்கள்' போன்ற ரீதியில் பல விளம்பரங்கள் வருகின்றன. தத்துவத்திலோ சரித்திரத்திலோ பட்டம் பெற்றவர்கள் டாக்ஸி ஓட்டும் பணி செய்கிறார்கள். ஆங்கில மொழியைச் சுத்தமாக, அழகாகக் கையாளத் தெரிந்தவர்கள் குறைந்து வருகிறார்கள். முழுமையான, மனிதனை மேம்படுத்தக்கூடிய கல்வி முறை மெள்ளத் தேய்ந்து அழிந்து வருகிறது. மிகவும் கவலைக்கிடமான சூழல் உருவாகியுள்ளது. இதனை உணர்ந்து தனியார் நிறுவனங்கள் கூட (உதாரணமாக IBM) கல்வியை வளர்ப்பதில் நாட்டம் காட்டுகின்றன.

● இந்திய இசை கேட்டு ரசித்ததுண்டா...?

●● கேட்டு ரசித்திருக்கிறேன். சமீபத்தில் நான் பங்களாதேஷில் கவிதைகள் படித்த போது ஓர் இளம் சரோத் வித்வான் பக்க வாத்தியம் வாசித்தார். சுமார் ஒன்றரை மணி நேரம் சேர்ந்து நிகழ்ச்சி நடத்தினோம். இந்தியாவில் நான் தங்கியிருந்த ஒரு ஹோட்டலில் சாஸ்த்ரீய இசையை நாள் முழுக்கப் பின்னணி இசை போல் ஒலிபரப்பினார்கள். தெய்வீகமான இசையை இவ்வாறு வர்த்தக ரீதியில் பயன்படுத்துவது தவறு என்று எனக்குத் தோன்றுகிறது.

— **சீதா ரவி**

படங்கள்: **ரமணன்**

## இரு பள்ளிகளில் படிக்கும் மாணவன்!

பம்பாயில் வீடு கிடைப்பதற்கு நீதிபதிகள் படும்பாடு சொல்லி முடியாது. இதன் காரணமாக ரோஷன் தால்வே என்னும் பெண் நீதிபதியின் மகனுக்கு மூன்று பள்ளியில் அட்மிஷன் கேட்டு, மூன்றிலும் கிடைத்து, இரண்டு பள்ளியில் படித்து வருகிறான்!

ஒவ்வொரு பள்ளியிலும் மூன்று நாட்கள் வகுப்புக்குப் போவான். இரண்டு பள்ளிகளிலும் தேர்வுகள் எழுதுகிறான்.

ஏதாவது ஒரு பேட்டையில் வீடு கிடைப்பது நிச்சயமானதும் அருகே உள்ள பள்ளிக்குப் போவது; மற்றொரு பள்ளியைத் துறந்து விடுவது என்று ஏற்பாடு.

ஆதாரம்: 'தி இண்டிபெண்டண்ட்'

தகவல்: வி. ந. ஸ்ரீதரன்.



# லாரி லோடில் மலர்கள்



• ரூபிணி: நாட்டியம் ஆரம்பம்...!

தாணுவின் 'தையல்காரன்' பட ஷூட்டிங் நாகர்கோவிலில் நடந்தது. பார்த்திபனும் ஐஸ்வர்யாவும் பாடி நடிக்கிற ஒரு காட்சிக்காக மதுரையிலிருந்து நாகர்கோவிலுக்கு நான்கு வேன்களில் பூக்களை ஏற்றி வந்தார்கள். பாடலில் வருகின்ற ஒரு சரணத்துக்கு மட்டும் செலவு மூன்று லட்ச ரூபாய்! இந்தப் படத்துக்குப் பார்த்திபனை எப்படி செலக்ட் பண்ணினார்கள்?

ஆரம்பத்தில் பார்த்திபன் வந்து தாணுவிடம் ஒரு கதை சொல்லியிருக்கிறார். அப்போது தாணு 'நல்லவன்' தயாரிப்பு வேலையில் இருந்த நேரம். பார்த்திபன் கதை சொன்ன விதம் மிகவும் பிடித்துப் போயிற்று! 'நல்லவன்' படத்தை இயக்கும் வாய்ப்பையே பார்த்திபனுக்கு அளிக்கத் தீர்மானித்தார். ஆனால், பார்த்திபன், "சார், நீங்க என்னை மதிச்சு டைரக்ட் செய்யச் சொன்னது எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு! ஆனால், 'நல்லவன்' கதை உங்களோடது. என்னோட முதல் படத்தை நானே எழுதி இயக்கணும்னு இருக்கேன். அதான் என் லட்சியம்" என்று பதில் சொல்ல, தாணுவுக்கு ஒரே வியப்பு!

இப்போது, பழைய உறவைத் தைப்பதற்குத் 'தையல்காரனா'க வந்திருக்கிறார் பார்த்திபன்.



• ஆனந்த் பாபு: டான்ஸ் நின்றது...!

●● ராஜ அருண் இயக்கும் 'முதல் முயற்சி' என்ற படத்தில் முதல் முறையாகப் பரத நாட்டியம் ஆடுகின்றாராம் ரூபிணி. முறைப்படி பரதம் கற்றிருக்கிறேன். இதை எத்தனையோ டைரக்டர்களிடம் சொன்னேன். யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. முதல் 'முயற்சியாக' ராஜ அருண்தான் பயன்படுத்தியிருக்கிறார்" என்கிறார்.

●● புது வசந்தத்திற்குப் பின்பு அதே மாதிரியான கதையம்சம் கொண்ட படங்களை எடுக்கத் தொடங்கியுள்ளார்கள். லேட்டஸ்ட் படம், 'பெண்ணுக்குச் சேதி வந்தாச்சு' ஓர் ஊமைப் பெண் — நான்கு இளைஞர்கள் பற்றிய கதை. திரைப்படக் கல்லூரியில் படித்து, டைரக்ஷன் வாய்ப்பே கிடைக்காமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஜி. பி. ரவிபாலுவை டைரக்டராக்க வேண்டும் என்பதற்காகவே, பத்து வருடப் போராட்டத்துக்குப் பின் இந்தப் படத்தைத் தயாரிக்கிறாராம் பாரதி ரவி. இந்தப் படத்தில் இரண்டு காட்சிகளை ஷூட் பண்ண மிகுந்த சிரமப்பட்டதாகக் கூறுகிறார். ஒன்று: ஐம்பது குழந்தைகளை நடிக்க வைத்தது. இரண்டு: கதாநாயகி ஐஸ்வர்யா சென்னை முழுக்க முக்கிய ரோடுகளில் ஸ்கேட்டிங் போகிற சீன்! ரசிகர்களிடமிருந்து இந்தப் 'பெண்ணுக்கு' நல்ல சேதி வந்தால் சரி!

●● இதுவரை இருபத்தைந்து படங்களில் வெறும் டான்ஸ் மட்டும் ஆடிய ஆனந்த் பாபுவுக்கு நல்ல கேரெக்டர் ரோல் பண்ண வேண்டும் என்று ஆசையாம். எதிர்பார்த்த விதமான வாய்ப்புக்கள் கிடைக்காமல் 'நல்ல' படங்களை வீட்டில் டெக்கில் பார்த்துப் பொழுது போக்கிக் கொண்டிருந்தவருக்குத் திடீர் வசந்தம்! இப்போது பதினைந்து படங்களில் கேரெக்டர் ரோல் பண்ணிக் கொண்டிருக்கிறார்!

— எஸ். பானு.



• ஐஸ்வர்யா: பெண்ணுக்குச் சேதி வந்தாச்சு.



• உடற்பயிற்சி வகுப்பு



• சிக்கலான கோணங்களைத் தாண்ட வேண்டும்.

# தலைமைக்குத்



• ஹிமான்ஷு ராவ்



• கௌரவ் துக்கல்

முதல் வரிசையில் அமர்ந்துள்ள கோபாலகிருஷ்ணன் — அம்மிணி தம்பதியின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளித்துத் ததும்புகிறது. 'ஸாரே ஜஹான் ஸே அச்சா, ஹிந்துஸ்தான் ஹமாரா...' என்று வாத்தியங்கள் மிடுக்காக முழங்க, அவர்களுடைய மகன் உன்னி, கச்சிதமான சீருடை அணிந்து, கம்பீரமான ராணுவ நடை நடந்து வருகிறான். அவன் பின்னால், அவனைப் போலவே கச்சித கம்பீரர்களாகச் சாரிசாரியாய் இளைஞர்கள். உன்னியின் தலைமையில் நடக்கும் அணி வகுப்பின் பிசிறில்லாத ஒழுங்கும், பின்னணியில் ஒலிக்கும் தேசபக்திப் பாடலும், அதற்கேற்ப நடைபயிலும் காலணிகளின் தாளகதியும் சிலிர்ப்பூட்டுகின்றன.

பலத்த கரகோஷத்துக்கிடையே உன்னி, தனது பெற்றோர் அமர்ந்துள்ள இருக்கைகளைக் கடந்து செல்கிறான். அவர்களும் சந்தோஷமாகச் சிரித்தபடி கைதட்டுகிறார்கள். ஆனால் உன்னி சிரிக்கவில்லை. அவன் முகத்தின் இறுகிய தசைகள் அணுவளவும் தளரவில்லை. சகாக்கள் பின்தொடர, பரேட் மைதானத்தின் மையத்தில் போய் நிற்கிறான்.

சென்னை செயின்ட் தாமஸ் மவுண்டில் உள்ள ராணுவ அதிகாரிகள் பயிற்சிப் பயிலகத்தில் (**Officers Training Academy, Madras**) பயிற்சியை வெற்றிகரமாக முடித்து, இளம் அதிகாரிகள் வெளியேறுவதையொட்டியே இவ்விழா நடக்கிறது. பயிற்சியில் முதல் இடம் பெற்ற உன்னியின் பெயர் ஒலிபெருக்கியில் அறிவிக்கப்படுகிறது. உன்னி தங்கப் பதக்கம் பெறுகிறான். **Sword of Honour** என்றழைக்கப்படும் பெரிய பட்டாக் கத்தியை அவன் இடுப்பில் உறையில் செருகுகிறார்கள்.

அணிவகுப்பைப் பார்வையிட வந்துள்ள லெஃப்டினன்ட் ஜெனரல் மஹாஜன் உரையாற்றுகிறார். ராணுவ வாழ்க்கைக்கு வெளியேயும் கௌரவம், கம்பீரம், கனிவுடன் விளங்கி முழுமையான மனிதர்களாகத் திகழுங்கள் என்று அறிவுரை கூறி வாழ்த்துகிறார்.

**Passing out parade** என்றழைக்கப்படும் இந்த நிகழ்ச்சி முடிந்ததும், இளைஞர்கள் எல்லோரும் ராணுவ அதிகாரிகளாகப் பிரமாணம் எடுத்துக் கொள்கிறார்கள். தங்கள் உயிரைத் துச்சமாக மதித்து நாட்டைக் காப்பாற்றுவதாகச் சத்தியம் செய்கிறார்கள். இதைத் தொடர்ந்து இவர்களுடைய பெற்றோர்கள் இவர்களை நாட்டுக்கு அர்ப்பணிக்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

தங்கள் மகன்கள் அணிந்துள்ள ராணுவச் சீருடையின் தோள் பகுதியில் உள்ள துணிப்பட்டை பித்தானை அவிழ்த்து, அதன் அடியில் உள்ள நட்சத்திரச் சின்னங்கள் மேல்புறம் தெரியும்படி திருப்பிப்

பொருத்துகின்றனர், பெற்றோர். இந்த நிகழ்ச்சி நடைபெறும் அரங்கமே உணர்ச்சி மிகுதியால் கனத்துப் போகிறது. தாய்மார்கள் நாட்டுடைமையான தங்கள் பிள்ளைகளின் கைகளைப் பற்றிக் கண்ணீரால் நனைக்கிறார்கள். தந்தைமார்கள் மகன்களின் தோள்களில் தட்டிப் பரிசுப் பொருட்களைக் கொடுக்கிறார்கள். மகன்களோ



* மேஜர் ஜெனரல் ஓபராய்

# தயாராகிறார்கள்...

உணர்ச்சிகளை மறைக்க முயன்று தோற்கிறார்கள் — எல்லாம் ஒரு சில நிமிடங்களுக்குத்தான்.... மீண்டும் ராணுவ மிடுக்கு புதிய இளம் அதிகாரிகளைப் பற்றிக் கொள்ள, முரட்டுத் தனமாகத் தோள்களைத் தட்டி ஒருவரையொருவர் வாழ்த்துகிறார்கள்.....

**உ**ன்னிகிருஷ்ணனைத் தேடிச் சென்று வாழ்த்துத் தெரிவித்து விட்டுக் கேட்கிறோம்.

''நீங்கள் அணிவகுப்பு மைதானத்தில் பரிசு பெற்ற போது எப்படி உணர்ந்தீர்கள்?''

''எல்லாமே கனவு போல் இருந்தது...''

''நடந்து வருகையில், பார்வையாளர்களிடையே முதல் வரிசையில் அமர்ந்திருந்த உங்கள் பெற்றோரைப் பார்க்கவில்லையா?''

''பார்த்தேன்!'' என்கிறார் உன்னி புன்னகையுடன்.

''உங்கள் முகத்தில் அவர்களைக் கண்டு கொண்டதன் அடையாளம்கூடத் தெரியவில்லையே...?''

''அதுதான் ராணுவப் பயிற்சி...!''

''பயிற்சியின் எந்த அம்சம் உங்களுக்கு ரொம்ப பிடித்திருந்தது?''

''எல்லாமே பிடித்திருந்தன. குறிப்பாக நடைமுறைப் பயிற்சிக்காக நடத்திய முகாம்கள்.....''

''இங்கு வந்து சேர்ந்ததால் என்ன இழப்புக்கள்?''

''நினைத்த போது குடும்பத்தை, பெற்றோரைப் பார்க்க முடியாது...''

* உன்னிகிருஷ்ணனை ராணுவத்துக்கு அர்ப்பணிக்கும் பெற்றோர்கள்.



''இவ்வளவு கட்டுப்பாடு விதிகள்.... சுதந்திரத்துக்கு இடைஞ்சல் இல்லையா?''

''ஒன்றைப் பெற மற்றொன்றை விட்டுக் கொடுக்கத்தானே வேண்டும்...''

''கடுமையான வாழ்க்கை — இதை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?''

''நினைவு தெரிந்த நாளாக ராணுவத்தில் சேரவே ஆசைப்பட்டேன். இங்கு வந்த பின், எனது தேர்வு சரியானதுதான் என்பது நிச்சயமாகி விட்டது.''

உன்னிகிருஷ்ணன், தாம் மேற்கொண்டு பயிற்சிபெற (Young Officers Course) நாஸிக் அருகேயுள்ள தேவ்லாலி என்னும் இடத்துக்குச் செல்லத் திட்டமிட்டிருப்பதாகவும் கூறுகிறார்.

**அ**திகாரிகள் பயிற்சிப் பயிலகத்தைச் சுற்றி பார்த்த போது, சிறு சிறு குழுக்களாகப் பயிற்சி மாணவர்கள் அணிவகுத்துச் செல்வதைப் பார்த்தோம். ''இவர்கள் எங்கே செல்கிறார்கள்?'' என்று நம்முடன் வந்த மேஜர் ஓபராயிடம் கேட்ட போது, ''ஒரு வகுப்பு முடிந்து மற்றொன்றுக்குச் செல்கிறார்கள். இந்த வளாகத்துள் இவர்கள் எங்கு சென்றாலும் சாதாரணமாக நடக்கக் கூடாது. உடம்பு சரியில்லாதவர்கள் கூட அதிகாலையில் டாக்டரைப் பார்க்க, அணிவகுத்துச் சீராகத்தான் நடந்து செல்ல வேண்டும்!'' என்றார். எங்களுடன் நின்ற மேஜரைக் கடந்து சென்றபோது விரைப்பாக 'சல்யூட்' செய்தபடி சென்றனர் அந்த இளைஞர்கள்.

'வகுப்பறை விட்டு வகுப்பறை மாறுவதற்குக் கூட ராணுவ நடை நடந்துதான் செல்ல வேண்டும், சீட்டியடிக்க முடியாது, பிடித்த பாட்டை முணு முணுக்க முடியாது, ஒரு நிமிஷம் நின்று ஒரு பூவையோ பட்டாம் பூச்சியையோ ரசிக்க முடியாது; சுதந்திரமாகச் சிரிக்கக்கூட முடியாது... இது என்ன வாழ்க்கை...?' — மனத்தில் எழுந்த வினாவை மேஜரிடம் கேட்டே விட்டோம்.





**பரம் வீரச் சக்கரம் பெற்ற பரமேஸ்வரன் பற்றி நினைவுகூர்கிறார் அவரது மனைவி உமா:**

**"நான் இறந்த பிறகு எனக்கு விருதுகள் வந்து பயனில்லை. உயிருடன் இருக்கும்போதே அவற்றைப் பெற வேண்டும்" எனக் கூறுவார் என் கணவர். ஆனால் நாட்டின் மிக உயர்ந்த ராணுவ விருதை அவருக்காக நான்தான் பெற்றுக் கொண்டேன்... 'பரம் வீர் சக்ரா' விருது பெற்ற முதல் தென்னிந்தியர் இவர்தான். இதுவரை பதினேழு பேர்தான் இவ்விருது பெற்றுள்ளனர்.**

**1988 ஆம் ஆண்டு நவம்பர் 24 ஆம் தேதியன்று இலங்கையிலிருந்து எனக்குக் கடிதம் வந்தது. விரைவில் வந்து சேர்வதாக எழுதியிருந்தார் என் கணவர். எங்கள் ஏழு வருடத் திருமண வாழ்வில் இரண்டு வருடங்கள் கூட நாங்கள் தொடர்ந்தாற் போல் சேர்ந்து இருக்கவில்லை. எனவே, கடிதம் வந்ததும் நான் மிகவும் மகிழ்ந்தேன். ஆனால் மறுநாளே, அவர் விடுதலைப் புலிகளின் தாக்குதலுக்குப் பலியான செய்தி வந்துவிட்டது.**

**அவர் இறந்தபோது பல யாழ்ப்பாணத் தமிழர்கள் எனக்கு அனுதாபக் கடிதங்கள் எழுதியிருந்தனர். பிற்பாடு பம்பாயிலும் கோட்டயத்திலும் சாலைகளுக்கு அவர் நினைவாகப் பெயரிட்டனர். மத்திய அரசு பரம் வீர் சக்ரா விருது தந்தது. ஆனால், இதுபோன்ற விருதுகளின் மதிப்பு பொதுமக்களால் இன்னும் சரியாக உணரப்படவில்லை.**

**ராணுவ விருதை வழங்கும் மத்திய அரசு, விருது பெறும் அதிகாரிக்கு வேறு கௌரவங்களை அளிக்கும் பணியை மாநில அரசிடம் விட்டு விடுகிறது. இவ்வாறு செய்யாமல் மத்திய அரசே அதிகாரியின் குடும்பத்தைக் கௌரவித்தால் நன்றாக இருக்கும்.**

**தமிழகத்தில் திருமதி கசியா ராஜேந்திரன் (தலைமைச் செயலரின் மனைவி) நடத்தும் தனியார் அமைப்பு, போர் விதவைகளுக்கு நிறைய உதவி வருகிறது.**

**சென்னை ராணுவப் பயிலகத்தில் பெற்ற பயிற்சிதான் தம் கடமையைச் செவ்வனே ஆற்றத் தமக்கு என்றும் துணை நிற்கிறது என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார் என் கணவர்.**

சந்திப்பு: **ப்ரியன்**
படம்: **ராஜன்**

"இந்தக் கேள்விகளை இந்தப் பையன்களிடமே கேளுங்களேன்" என்று இரு இளைஞர்களை அழைத்து வந்து நம் முன் நிறுத்திவிட்டு ஒதுங்கிக் கொண்டார் மேஜர் ஒபராய்.

"இதில் கிடைக்கும் ஆத்ம திருப்தி வேறெதில் கிடைக்கப் போகிறது!" என்றார் ஹிமான்ஷு ராய். "டெல்லியில் பெரிய ஐந்து நட்சத்திர ஹோட்டலில் செக்யூரிட்டி பிரிவில் பணியாற்றினேன். நல்ல சம்பளம். ஆனால் கொஞ்சம் கூட மனத் திருப்தியில்லை. இப்போதுதான் சந்தோஷமாக இருக்கிறேன்," என்றார்.

கௌரவ் துக்கல் என்ற இளைஞரும் டெல்லியைச் சேர்ந்தவர். "இந்தச் சீருடையை அணியவே கொடுத்து வைத்திருக்க வேண்டுமே! ஒவ்வொரு ராணுவ அதிகாரியும் தன் கீழ் பணியாற்றும் நபர்கள் தவிர, அவர்களுடைய குடும்பத்தினர் அனைவரது பாதுகாப்புக்கும் சுக துக்கங்களுக்கும் தார் மிகப் பொறுப்பு ஏற்க வேண்டும். அதிகாரியின் உத்தரவுகளில் ஒரு சிறு தவறு நேர்ந்தாலும் இத்தனை பேரும் பாதிக்கப்பட வாய்ப்பு உள்ளதே! எனவே, இந்தப் பொறுப்பு மிகுந்த பணியில் ஒவ்வொரு நிமிடமும் விழிப்புடன் இருக்க வேண்டும்; சவால்களைச் சந்திக்க வேண்டும். இதற்காக எவ்வளவு கடுமையான பயிற்சி பெற்றாலும் தகும்" என்றார்.

"மனிதனை மனிதன் தாக்கிக் கொல்ல வேண்டிய நிர்ப்பந்தம் இப்பணியில் உள்ளதே; இது உங்களை ஒரு போதும் உறுத்தியதில்லையா?" என்று கேட்ட போது இரு இளைஞர்களும் வேகமாக மறுத்தார்கள்.

"நாம் கொல்லாவிட்டால் எதிரி நம்மைக் கொன்றுவிடுவான் என்ற நிலையில்தான் கொல்ல முற்படுவோம். மேலும், ராணுவம் பல வகையான நிவாரணப் பணிகளுக்கும் உதவுகிறது. புயல், வெள்ளம், பூகம்பம், விபத்து போன்ற சந்தர்ப்பங்களில் மனித நேயம் மட்டும் இருந்தால் போதாது. வீரமும் துணிவும் கூடவே இருந்தால்தான் பல உயிர்களைக் காப்பாற்ற முடியும். இதற்கெல்லாம் நாங்கள் தயாராக்கப்படுகிறோம்."

**"சே**ரிடம் அறிந்து சேர்வோருக்கு ராணுவமும் சுவர்க்கம்தான்!" என்பது புலப்பட, மேஜர் ஒபராயுடன் பயிலகத்தின் வேறு பல பகுதிகளைச் சென்று பார்த்தோம்.

அழகான நூலகத்துக்கு அழைத்துச் சென்று, பயிலகத்தின் நடை முறைகளை மேலும் விளக்கினார் மேஜர் ஒபராய்:

ஆபீசர்ஸ் டிரெயினிங் அகாடமியில் சேர விரும்புவோர் 19—25 வயதுக்குட்பட்ட பட்டதாரிகளாக இருக்க வேண்டும். யூ.பி.எஸ்.ஸி. தேர்வில் (**Combined Defence**

# மாஸ்

## அசல் பாதாம் கலந்த ஒரே ஒரு பானம்

**பண்டிகைகால சிறப்புச் சலுகை**
**ஒவ்வொரு பாக்கெட்டிலும் 50 கிராம் "மாஸ்" அதிகமாக உள்ளது.**




இந்த "மாஸ்" தயாரிப்பில் மட்டுமே இயற்கையான அசல் பாதாம் பருப்பு அதிக அளவில் கலந்திருக்கிறது. மேலும், மற்ற பாதாம் பானங்களைவிட "மாஸ்" மிகவும் சிக்கனமானது.

## இதோ.... ஓர் நற்சான்று.

ஒவ்வொரு பாக்கெட்டிலும் உள்ள 200 கிராம் "மாஸ்" 50 'கப்' சாதாரண பாலை நற்சுவையுள்ள பாதாம் பாலாக மாற்ற போதுமானது. அதாவது ஒரு 'கப்' பாதாம் பால் தயாரிக்க 4 கிராம் "மாஸ்" கலந்தால் போதும். வேறு எந்தவொரு பாதாம் தயாரிப்பிலும் இது சாத்தியமில்லை. ஏனெனில், மற்ற பாதாம் பவுடரில் ஒரு 'கப்' பாதாம் பாலுக்கு 10 கிராம் அல்லது அதற்கு மேலும் தேவைப்படும். எனவே, மற்ற பாதாம் தயாரிப்புகளின் 200 கிராம் பவுடரில் 20 லிருந்து 22 'கப்' பானம் மட்டுமே தயாரிக்க முடியும்.

இது தவிர "மாஸ்" பாதாம் பானத்தின் நற்சுவையும், மணமும் ஈடு இணையற்றது.

"மாஸ்" சுலபமாக கிடைக்கும் பொழுது மற்ற பாதாம் தயாரிப்புகளை இருமடங்கு விலை கொடுத்து ஏன் வாங்க வேண்டும்? எல்லா பாதாம் தயாரிப்புகளை விட "மாஸ்" சிக்கனமானதா? இல்லையா? இப்பொழுது நீங்களே முடிவு செய்யுங்கள்!



**"எனக்குக் கிடைச்ச இந்த பிரமோஷனுக்குக் காரணமே என்னோட நகைச்சுவை உணர்வுதான்!"**

**"எனக்குத் தெரியாதா என்ன... மானேஜர் ஜோக்குன்னு என்ன சொல்லி அறுத்தாலும் குபீர்னு சிரிச்சு அவரைக் குஷிப்படுத்தற ஆளாச்சே நீ..!"**

**— கோபிகா எஸ். முரளி.**

Services Exam) தேறி, சர்வீஸ் செலக்ஷன் போர்ட்டின் நேர்முகத் தேர்விலும் தேர்வாகிய பிறகு விண்ணப்பிக்க வேண்டும். நாற்பத்து நாலு வாரப் பயிற்சியில் நீச்சல் உள்படப் பலவகையான உடற் பயிற்சிகள், ஆயுதம் பிரயோகிக்கப் பயிற்சி, நடைமுறைப் போர் பயிற்சி, ஆகியவை அளிக்கப்படுகின்றன. பட்டனைத் தட்டி ஏவுகணைகள் செலுத்தும் நவீன யுத்த முறைகள் வந்துவிட்டாலும் உடல், மன வலிமைக்கு நிறைய முக்கியத்துவம் தரப்படுகிறது. நடைமுறைப் பயிற்சிக்குச் செயற்கை யுத்த சூழலை உருவாக்குவதற்கென்றே அவ்வப்போது ஜவான்கள் அகாடமிக்குத் தருவிக்கப்படுகின்றனர்.

போரின் போது அவசியமாகத் தேவைப்படக்கூடிய ரேடியோ இயக்குதல், வரைபடங்களைப் பார்த்துப் பிரதேசங்களைப் புரிந்து கொள்ளுதல், போன்ற பயிற்சிகளும் அளிக்கப்படுக்கின்றன.

ஹிந்தி, ஆங்கில மொழிகள் தவிர, ராணுவ சங்கேத மொழி, ராணுவச் சட்டம் (இது சிவிலியன் சட்டத்திலிருந்து வேறுபட்டது), சரித்திரம், பூகோளம், உலக நடப்பு, அரசியல், விஞ்ஞானம், பொருளாதாரம் என்று பல்வேறு பாடங்கள் நடத்தப்படுகின்றன.

ஒற்றாடல், மனோதத்துவம் — சிறப்பாகக் குறிப்பிட வேண்டிய பாடங்கள். நிர்வாகம், தலைமையேற்று நடத்துதல் போன்றவற்றிலும் நிறைய கவனம் செலுத்தப்படுகிறது.

வாரம் ஒரு முறை மட்டும் ஆடல் பாடலுக்கும், போலோ போன்ற வீர விளையாட்டுக்களில் ஈடுபடுவதற்கும் நேரம் ஒதுக்கப்படுகிறது. மற்றபடி, நாற்பத்து நாலு வாரங்களுக்கு, காலை ஐந்து மணி தொடங்கி இரவு பத்தேகால் வரை என்ன செய்ய வேண்டும் என்று அட்டவணையிட்டு, அதன்படி வினாடி பிசகாமல் பயிற்சி, பயிற்சி, பயிற்சி....!

இதை வெற்றிகரமாக முடித்தால் கமிஷண்ட் ஆபீசர் என்ற பட்டமும் ஐந்து வருடங்களுக்கு உத்தரவாதமான ராணுவப் பணியும் காத்திருக்கின்றன. இந்த ஐந்து வருடங்களில் சிறப்பாகப் பணியாற்றுவோர் நிரந்தர ராணுவப் பணிக்கு ஏற்கப்படுகிறார்கள்.

பயிற்சிக் கட்டணம் 1800 ரூபாய். இதிலிருந்து பயிற்சிக் காலத்தில், மாதந்தோறும் 90 ரூபாய் கைச் செலவுக்குத் தரப்படும். சீருடைக்கென அரசாங்கம் மூவாயிரம் ரூபாய் தருவதோடு, பயிற்சியின் கடைசி ஆறு மாதங்களுக்கு 1500 ரூபாய் மாதச் சம்பளமும் தருகிறது.

"**சி**றந்த தலைமைக்குரிய பண்புகளை இங்கு பயில்வோருக்கு ஊட்டுவதுதான் எங்கள் பிரதான நோக்கம்" என்கிறார் மேஜர் ஜெனரல் ஒபராய். இவர் அகாடமியின் கமாண்டன்ட். "இங்கு பயிற்சி பெற்ற அதிகாரிகள் பலர், வீர விருதுகள் பெற்றுள்ளனர். சமீபத்தில் இலங்கையில் உயிர் துறந்த மேஜர் ஆர். பரமேசுவரன் இங்கு பயிற்சி பெற்றவர். இவருக்குப் 'பரம் வீர் சக்ரா' விருது வழங்கப்பட்டுள்ளது. இவர் நினைவாகத்தான் எங்கள் அணிவகுப்பு மைதானத்துக்குப் 'பரமேஸ்வரன் பரேட் கிரவுண்ட்' என்று பெயரிடப்பட்டுள்ளது.

"இந்த அகாடமியின் மீதும் இந்திய ராணுவத்தின் மீதும் பொது மக்கள் வைத்துள்ள மதிப்புக்கும் மரியாதைக்கும் உதாரணம் பாருங்கள்" என்று ஒரு கடிதத்தின் சில பகுதிகளைப் படித்துக் காட்டினார் மேஜர் ஜெனரல் ஒபராய்:

> அன்புள்ள மேஜர் ஜெனரல்,
>
> உங்கள் அகாடமியைப் பற்றிக் கேள்விப் பட்டதிலிருந்து அங்கு பயிற்சி பெற்று வெளியேறும் ஒரு வீரம் மிக்க இளைஞரைத்தான் திருமணம் செய்து கொள்வது என்று நான் முடிவு செய்து விட்டேன். அத்தகைய ஓர் இளைஞரைத் தேர்வு செய்ய எனக்கு நீங்கள் உதவ வேண்டும்....

"மிலிட்டரி காரனுக்குக் கழுத்தை நீட்டாதே என்று சொன்ன காலம் மலையேறிப் போச்சு..." என்று சிரிக்கிறார் மேஜர் ஜெனரல் ஒபராய்.

**— எஸ். ஆர்.**

அட்டை வண்ணப்படம், படங்கள்: **ரமணன்**

**அட்டையில்: பாஸிங் அவுட் பரேட் ஒரு காட்சி; பார்வையிட வந்த சிறப்பு விருந்தினர்: லெஃப்டினன்ட் ஜெனரல் மஹாஜன்.**

# புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் ஹமாம்!



கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு. புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம். சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம். புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.

## ஹமாம்
குடும்ப சோப்




டாட்டா தயாரிப்பு

CLARION/B/T/23/203 TAM




# கல்கி

1990 அக்டோபர் 14
மலர் : 49 இதழ் : 11
பிரமோதூத புரட்டாசி 28




## ஆட்சியில் உள்ளோரின் வன்முறைச் செயல்கள்!

‘போராடுகிறோம்’ என்று கூறிப் பொதுச் சொத்துக்களுக்கு நாசம் விளைவித்து, வன்முறைகளில் ஈடுபடுவது மிகப் பெரிய குற்றமே. தீக்குளிப்பு செய்து, அல்லது விஷமருந்தித் தன்னைத் தானே மாய்த்துக் கொள்வது அஹிம்சை அல்ல; அது பிளாக்மெய்லுக்குச் சமமானதே. எனவே, அதுவும் வன்முறைதான். இட ஒதுக்கீடு எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ளவர்கள் இந்த மார்க்கங்களைப் பின்பற்றுவது வருந்தத்தக்கது. அவர்களுக்கு ஆதரவளிக்கிறோம் என்று சொல்லிக் கொண்டு வருகிறவர்கள் வெளிப்படையாகவே, ‘கொலை செய்’; ‘வன்முறையில் ஈடுபடு’ என்று தூண்டிவிடவும் ஆரம்பித்து விட்டார்கள். ஆக, இந்தக் கிளர்ச்சி, அதனை ஆரம்பித்தவர்களின் கட்டுப்பாட்டிலிருந்து நழுவி, சமூகவிரோத சக்திகளின் கரங்களில் சிக்கிவிட்டது; ஐயமில்லை.

ஆனால் இதற்கு மறுபுறமும் உண்டு. ஆட்சிக்கு வந்துவிட்ட தலைவர்கள், தங்கள் அதிகார பலத்தை உணரத் தொடங்கியதும் அடக்கம் இழந்து வன்முறையாளராக மாறி விடுகிறார்கள். ‘நாம் நினைத்தபடிதான் எல்லாம் நடக்க வேண்டும்’; ‘நமக்குத்தான் நல்லது கெட்டது தெரியும்’; ‘நம்மால்தான் நாட்டை வழி நடத்திச் செல்ல முடியும்’ என்றெல்லாம் ஆணவத்தோடு எண்ணிச் செயல்படுகிறார்கள். பஸ்ஸை எரிப்பதும், கல்லை எறிவதும் வன்முறை எனில், அதைவிடப் பெரிய வன்முறை, மக்களுக்கு விருப்பமில்லாத ஒரு விஷயத்தை அவர்கள் மீது அரசு — அதுவும் ஒரு மைனாரிடி அரசு — திணிப்பதாகும்.

இட ஒதுக்கீடு சிபாரிசுகளைச் செய்துள்ள மண்டல் அறிக்கையில் பல குறைபாடுகள் உள்ளதை அறிஞர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். பிற்படுத்தப்பட்டவரிலேயே பலருக்கு அநீதி இழைக்கப்படக் கூடும் என்பதைக் காரண காரியங்களோடு விளக்கியிருக்கிறார்கள். இதையெல்லாம் நன்கு அலசி ஆராய்ந்து, சமுதாயத்தின் பல தரப்பட்டவர்களையும் கலந்து ஆலோசித்து, குறிப்பாக இதனால் பாதிப்புக்கு உள்ளாகக் கூடியவர்களையும் அழைத்துப் பேசி, அதன் பிறகல்லவா இந்தச் சிபாரிசைத் தக்க மாற்றங்களுடன் அரசு உத்தரவாக அமுல்படுத்த வேண்டும்? அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக, கருணாநிதி கூறியதைச் சிரமேற் கொண்டு, அரசியல் ஆதாயத்துக்காகப் பிரதமர் செயலாற்றப் போக, இப்போது விழி பிதுங்க விழிக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது.

மண்டல் அறிக்கையிலே சில குறைபாடுகள் இருப்பினும் ஓர் அருமையான, முக்கியமான கருத்து கூறப்பட்டுள்ளது: ‘இட ஒதுக்கீட்டினால் மட்டுமே பிற்படுத்தப்பட்டவரை முன்னேற்ற முடியாது. உண்மையான முன்னேற்றம் என்பது அவர்களுக்குச் சிறந்த கல்வியை அளித்து, வாழ்க்கையின் போட்டா போட்டிகளைத் துணிவுடன் சந்திக்கத் தகுதியுள்ளவர்களாக்குவதே’ என்ற யதார்த்த உண்மைதான் அது. இதைக் கவனிப்பார் இல்லை. இட ஒதுக்கீடு செய்து உத்தரவு போடுவது சுலபம் என்பதால் அதை மட்டும் பிடித்துக் கொண்டு அரசியல் ஆதாயம் அடையப் பார்க்கிறார்கள்.

‘வேலை வாய்ப்பு இல்லாமல் போய்விடும் என்ற பயம்தான் இளைஞர்களிடையே இட ஒதுக்கீடு எதிர்ப்புக் கிளர்ச்சி பரவக் காரணம்’ என்று இப்போது பிரதமர் துப்புத் துலக்கியிருக்கிறார்! பிரதமருக்குத் துப்பறியவும் தெரியவில்லை; உண்மைக் காரணத்தை உணரும் திறனில்லை என்பது ஒருபுறமிருக்க, இதற்கு அவர் கூறும் பரிகாரம் வேடிக்கையாக, அவரிடம் நமக்குள்ள மதிப்பை மேலும் குறைப்பதாக உள்ளது. ‘இளைஞர்களின் பயத்தைப் போக்க வேலை வாய்ப்புப் பெருக்கும் திட்டத்தை அமுல்படுத்துகிறேன்’ என்கிறார். எப்படி இட ஒதுக்கீடு செய்வதால் மட்டுமே பிற்படுத்தப்பட்டவரை முன்னேற்ற முடியாதோ, அவ்வாறே, சட்டம் இயற்றி, வரிப்பணத்தை வாரிவிட்டால் மட்டுமே வேலை வாய்ப்புக்கள் பெருகி விடாது. வேலை வாய்ப்புக்கள் பெருகுவது என்பது அடிப்படையான தொழில் வசதிகளை அதிகரித்தல், தொழில் தொடர்புடைய கல்வியை அனைவரும் பெற ஏற்பாடு செய்தல், சிறந்த தொழில், பொருளாதாரக் கொள்கைகளை வகுத்து அமுல்படுத்துதல் போன்ற தொலை நோக்குத் திட்டங்களைச் சார்ந்த விஷயம். வண்டியைக் குதிரைக்கு முன்னால் இணைத்தால் வண்டி நகராது; குதிரை சவுக்கடி பெறுவதுதான் மிச்சம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

சிரிக்கச் செய்யுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!

# வீரப்பன் கேஸில் தங்கப் பதக்கம் வாங்கியவர்!



"'நோ என்ட்ரி'யில் ஏன் வந்தாய் என்று கேட்டால், அரசின் ஆலோசனையின் படிதான் வந்தேன் என்கிறாயே!"

"ஆமாங்க. 'பெட்ரோலைச் சேமியுங்கள்' என்ற அரசு விளம்பரம்தான் என்னைச் சுற்றி வராமல் 'ஒன்வே'யில் வரச் செய்தது."

— எம். கே. முகம்மது அலி, ஈரோடு.

* * *

"இன்னொரு பாதாம் அல்வா சாப்பிடுகிறாயா?"

"என்னங்க, இப்பத்தான் வந்து உட்கார்ந்து இருக்கோம், அதுக்குள்ள இன்னொரு பாதாம் அல்வா வேணுமான்னு கேட்டால் என்ன அர்த்தம்?"

"கல்யாணமான புதிசிலே ஒருதரம் வாங்கிக் கொடுத்தேன்ல!"

— க. சந்தானம், கோவை – 8.

* * *

"ஒரு நாள் ஆசையா ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல சாப்பிட்டது தப்பாப் போச்சுடா!"

"ஏண்டா?"

"ஆறு மாசம் தொடர்ந்து மாவாட்ட வேண்டியதாயிடுச்சே!"

— ஆ. நல்லமுத்து, திருநெல்வேலி.

* * *

அந்தப் பத்திரிகைக்கு எதை அனுப்பினாலும் பாதிக்கு மேல் எடிட் செய்துதான் வெளியிடுவார்கள்.

ஒரு கதையைப் பற்றி வாசகர் கடிதம் பகுதிக்கு ஒருவர், "கதையை ஏண்டாப் படிச்சோம் என்றாகி விட்டது" என்று எழுதினார்.

அடுத்த இதழை வாங்கிப் பிரித்தவருக்கு அதிர்ச்சி! அவரது கடிதம் எடிட் செய்யப்பட்டிருந்தது, 'கதை டாப்' என்று!

— க. சம்பத், திருவள்ளூர்.

* * *

"சார், ஏன் வண்டி ஸ்டார்ட் ஆகவில்லை? பெட்ரோல் இல்லையா?"

"பெட்ரோல் இருக்கு! ஆனால், சதாம் உசேன் சொன்னால்தான் டேங்கிலிருந்து இஞ்சினுக்கு இறங்குமாம்!"

— பி. டி. நாகராசன், வந்தவாசி.

* * *

● ஹோட்டலில் நுழைந்து, "என்ன இருக்கு?" என்று கேட்டேன்.

சர்வர், "பக்கடா தூளா இருக்கும்" என்று சொல்லவும், ஆர்டர் செய்தேன்.

சர்வர் கொண்டு வந்தது வெறும் தூளாக நொறுங்கிப் போய் இருந்தது.

"என்னய்யா இது?" எனக் கேட்டேன். சர்வரோ அமைதியாக, "சார்! நான்தான் முதலிலேயே 'பக்கடா தூளாக இருக்கும்'னு சொன்னேனே!" என்றார்.

— அ. நெல்சன், தூத்துக்குடி – 5.

* * *

"அங்கே போறாரே அவருதான் வீரப்பன் கேஸ்ல தங்கப் பதக்கம் வாங்கின போலீஸ்காரர்!"

"வீரப்பனைத்தான் இன்னும் பிடிக்கலீங்களே!"

"அவரு நூறு அடி தூரத்திலிருந்து வீரப்பனைப் பார்த்திருக்காரே!"

— பி. தங்கப்பா, கோவை.

* * *

**நிருபர்: பெரியவரே! இந்தத் தொண்ணூறு வயதிலும், உங்கள் கண்கள் கூர்மையாகவும், பிரகாசமாகவும் இருக்கக் காரணம்?**

**பெரியவர்: என்னுடைய வாலிப வயதில், நான் வேலைக்காகச் சுமார் 1675 தடவை, பல இண்டர்வியூக்களுக்கும் சென்றிருக்கிறேன்.**

**நிருபர்: அதனால்?**

**பெரியவர்: எல்லா இண்டர்வியூவிலும் 'ஐ வாஷ்' தானே பண்ணினாங்க!**

**— கே. பி. ராஜலெட்சுமி, கல்லிடைக்குறிச்சி.**

* * *

"உங்க மனைவிக்கு அடிக்கடி வியாதி வர்றதுக்கு, அவங்ககிட்டே எதிர்ப்புச் சக்தி குறைஞ்சதுதான் காரணம்!"

"இருக்காது டாக்டர். முன்னைவிட இப்பத்தான் அவ என்னை அதிகமா எதிர்க்கிறாள்!"

— ஞா. ஞானமுத்து, கந்தம்பாளையம்.

* * *

**மாறுப் போர்வையில் ஐந்து வயதுச் சிறுவன் சேகரிடம் ஜப்பானில் மாக்னடிலம் முறையில் தண்டவாளத்தைத் தொடாமல் பறக்கும் ரயில்கள் பற்றி வந்த கட்டுரையின் புகைப்படத்தைக் காட்டி, "நீ நன்றாகப் படித்துப் பெரியவனாகி, இதுபோலவெல்லாம் கண்டுபிடிப்பாயா?" என்று கேட்டேன்.**

**"ஓ, நிச்சயமாய்க் கண்டுபிடிப்பேனே! நேற்றைக்கு என் அப்பாவின் லைப்ரரி புக்கைக் காணோம். அதையே நான்தான் கண்டுபிடிச்சேன்!" என்று கூறி என்னை அசத்தி விட்டான், வாண்டுப் பயல்!**

**— வை. பிரசதா, ஸ்ரீரங்கம்.**

* * *

"ரசிகர்கள் துண்டுச் சீட்ல எழுதிக் கொடுத்த பத்துப் பாட்டுல ஒரு பாட்டைக் கூட நீங்க கச்சேரியிலே பாடலியே!"

"அந்தப் பாட்டெல்லாம் ரசிகர்களுக்கு ரொம்பப் பிடிச்ச பாட்டாம். அதனால தயவு செய்து பாடாதீங்கன்னு எழுதியிருந்தாங்க!"

— லதா ஞானசேகரன், தூத்துக்குடி.

* * *



* * *

**உணவு மற்றும் விவசாயத் துறை அமைச்சரின் கிராம விஜயம். ஒரு குடிசையினுள் உரையாடல்:**

**அமைச்சர்: காலையில் என்ன சாப்பிட்டீங்க?**

**இல்லத்தரசி: 'கம்பங் கஞ்சி'ங்கய்யா!**

**அமை: மத்தியானத்துக்கு...?**

**இல்லத்: 'மீந்து போன கஞ்சியுடன் பானைத் தண்ணீரை ஊற்றிக் கலக்கிய கம்பங்கூழ்'தாங்க.**

**அமை: இரவில் என்ன சாப்பிடுவீங்க?**

**இல்லத்: ஈரத் துணியைக் கட்டிக்குவோம்.**

**அமை: எதற்காக?**

**இல்லத்: பசி தெரியாதிருக்கத்தான்!**

**அமை: நல்ல ஐடியாதான்... யோவ், செகரட்டரி! இதை நோட் பண்ணிக்கய்யா! இனிமே இலவச வேஷ்டி, சேலைக்குப் பதில், நனைத்து வயிற்றில் கட்டிக் கொள்ளத் தோதாய் இலவசத் துணி வினியோகிக்கலாம்!**

**— எஸ். செல்லப்பா, தஞ்சாவூர்.**

# வட்டமேஜை

* ''டிக்கெட் இல்லாப் பயணிகள்'' தலையங்கம், அதனுடன் சேர்ந்த கேலிச் சித்திரங்கள் உண்மையை எடுத்துக் கூறுவனவாக அமைந்திருந்தன.

தகுதி என்ற டிக்கெட் வைத்திருப்பவர்களைக் கீழே இறங்கச் சொல்லிவிட்டு, தகுதி இல்லாத, டிக்கெட் வைத்திருக்காமல் இருப்பவர்களுக்கு இடம் கொடுக்க வேண்டும் என்பது எந்தச் சமூக நீதியில் சேர்ந்தது?

தலையங்கத்தில் நீங்கள் கூறியது போல இட ஒதுக்கீடு என்பது குறிப்பிட்ட காலவரை என்ற எல்லை வகுத்தே வழங்கப்பட வேண்டும்.

மதுரை — 7, எஸ். திருமலை.

* தலையங்கத்தில் முதல்வரின் சிக்கனமில்லாப் பேரணியையும், அதை ஒரு பிரதமர் தன் வேலைகளை விட்டுப் பார்த்து வியந்ததையும், வெகு அழகாகப் பட உதாரணங்களால் விவரித்துள்ளது பாராட்டத் தக்கதாகும்.

சென்னை — 44, எஸ். குருசாமி.

* இந்த வாரம் கல்கியைச் 'சிரிப்பு ஸ்பெஷல்' என்று அறிவித்திருக்கலாமே! 1. சிரிக்க வையுங்கள் சிங்கப்பூர் செல்லுங்கள், 2. ஊழல். (கற்பனை பத்திரிகை) 3. ஜோக்ஸ், 4. தராசு பகுதியில் மாமியார் வீட்டில் எத்தனை நாட்கள் தங்குவது என்ற கேள்விக்கான பதில் இப்படி ஒன்றை ஒன்று மிஞ்சும் ஜோக்ஸ் சூப்பர்!

சென்னை — 82, எஸ். யோகலிங்கம்.

* 'மாமியார் வீட்டில் எத்தனை நாள் தங்கலாம்!' என்பது போன்ற கேள்விகளுக்கும் பதில் அளிப்பதன் மூலம் மற்ற 'வாரப் பத்திரிகை'களுக்குக் 'கல்கி' ஒன்றும் குறைந்து போய் விடவில்லை என்பதை நிரூபித்திருக்கிறீர்கள். மிக்க நன்றி! தொடரட்டும் உங்களின் சமூகத் தொண்டு!

தக்கோலம், மு. பாரக்.

* ஊழல் பத்திரிகை அருமையாக, விழுந்து விழுந்து சிரிக்கத்தக்கதாக இருந்தது. 'ஊழல் எங்கள் ஜாதியே லஞ்சம் அதில் நீதியே' எனத் தலைப்பு வாக்கியம் போட்டிருக்கலாம்!

திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

**ஊழல் பத்திரிகைக்குத் தலைப்பு வாக்கியம்!**

* நீண்ட நாட்களுக்குப் பிறகு, கல்கியில் ஒரு மர்மக் கதை (போட்டிக் கதை — 2) வந்தமைக்கு முதல் பாராட்டு. திரில், திகில், சஸ்பென்ஸ் கலந்த சுவாரஸ்யமான கதைக்கு இரண்டாவது பாராட்டு. கம்பீரமான படத்துக்கு (அரஸ்க்கு) மூன்றாவது பாராட்டு!

தஞ்சை, ரா. து. பிரகாஷ்.

* ஒரு மாணவனின் கல்விச் சான்றிதழைப் பெற இவ்வளவு தூரம் அலைந்தும் கடைசியில் பயனில்லையே!

இன்று நாட்டின் நடைமுறை இதுதான் என்பதை நன்கு உணர்த்தியது கௌசல்யா ரங்கநாதனின் 'புதை மணல்'.

சாத்தூர், எம். செல்லையா.

* எஸ். கண்ணனின் 'புலன் விசாரணை' ஒரு சுவாரசியமான திரைப்படத்தைப் பார்ப்பது போல் இருந்தது. ஏற்கெனவே இது மாதிரியான கதை அமைப்பு வந்து இருந்த போதும் தமது தெளிந்த நீரோட்டமான நடையால் இதனை வித்தியாசப்படுத்திக் காட்டியதற்குப் பாராட்டுக்கள்.

மதுரை, 'இளவல்' ஹரிஹரன்.

* 'மீண்டும் ஒரு கவிதை' சிறுகதையில் எழுத்தாளர் மிக்க இன்றைய பலரின் வாழ்க்கையை, உணர்ச்சிகள் புண்படா வண்ணம் வெகு இயல்பாக எடுத்துக்காட்டியிருப்பது ஆசிரியருக்கும், கதைக் கருவிற்கும் சிறப்பு.

ரெட்ஹில்ஸ், பூஜ்யா.

* பெண்கள் பிரச்னை பற்றிய விவாதம் சூடாகவும் அறிவுபூர்வமாகவும் இருந்தது. அதே சமயத்தில் பாபா சொன்ன கதையில் இடம்பெற்ற, அனுமார் இலங்கையைப் பார்த்த நிகழ்ச்சியும் நினைவுக்கு வந்தது...

சென்னை — 33, வி. எஸ். வாசன்.

* மூன்று பெண்கள் ஒரு முக்கிய கலந்துரையாடலில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனால் நீங்களோ அட்டைப் படத்தில் 80% இடத்தை நடிகைக்கு மட்டும் அளித்துள்ளீர்கள்!

புகழ்பெற்ற கவிஞரும் எழுத்தாளரும் கலந்து கொள்வதால் நிறைய எதிர்பார்த்தேன். சாதாரணப் பெண்கள் போல் ஒரு குறுகிய வட்டத்துக்குள்ளேயே சிக்கிக் கொண்டு வெளியே வரவேயில்லை! பெண்களின் இன்றைய நிலைக்கு உண்மையான காரணத்தை அலசி ஆராய்ந்து, அதற்குத் தீர்வு காணும் வகையில் யோசனை கொடுத்திருந்தால், கலந்துரையாடல் நிறைவு பெற்றிருக்கும்.

மதுரை — 10, நூர்.

* ஏன் சார் மூன்று பெண்கள் விவாதித்தால் ஆணாதிக்கத்தைப் பற்றித்தானே பேசுவார்கள்! விவாதத்தில் இரண்டு ஆண்களும் இருந்திருந்தால் களை கட்டி இருக்குமே!

சென்னை — 92, கி. ராஜகோபால்.

* கல்கி 30.9.90 இதழில் ''அருள்வாக்கு'' பகுதியில், விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தில் உள்ள ச்லோகம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் ஒரு ''ராம'' விட்டுப் போயிருக்கிறது.

''ஸ்ரீ ராம ராம ராமேதி ரமேராமே மநோரமே!
ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராமநாம வராநநே!''

என்று இருக்க வேண்டும்.

சிதம்பரம், ராஜகோபாலன்.

# வானம் பார்த்த பூமியானாலும் வரம் வாங்கி வந்த மண்!

சுப்பிரமணிக்கு வானம் குமுறினாலே பயம் நெஞ்சைக் குப்பென்று அடைக்கும். தீயணைப்பு வண்டியின் மணி சப்தத்தை எப்போதாவது கேட்டாலோ உடம்பெல்லாம் திகில் பரவும் — தமது எட்டடிக்குப் பத்தடி ஓலைக் குச்சு மழையில் சிதைந்து விடுமோ? தீயில் கருகி விடுமோ? என்ற நித்திய கவலை ஆட்டிப்படைக்க எத்தனைக் காலம்தான் ஓட்ட முடியும்...! 'சொந்தமாய் ஒரு வீடு கட்ட வேண்டும் — மழைக்கும் தீக்கும் சுலபத்தில் பலியாகாத கல்லு, சிமெண்ட் வீடு...' — அடிக்கடி மனத்தில் வைராக்கியம் கொள்வார் சுப்பிரமணி. ஆனால், ஒரே ஒரு ஏக்கரா சொந்த நிலத்தில் கம்பும் சோளமும் பயிரிட்டுப் பிழைப்பு நடத்தும் ஏழை விவசாயிக்கு இது கைகூடுகிற காரியமா...? ஏதேதோ வியாபாரங்களும் செய்து பார்த்தார். எதிலும் குறிப்பிடத்தக்க





* தொழிற்சாலையில் தரம் பிரித்தல்: நோகாத வேலை!



* ஜெயராமன்: நீங்களே கணக்குப் போடுங்க...

அளவில் லாபம் கிடைக்கவில்லை.

இப்படியே ஏழு வருடங்கள் உருண்டோடி விட்டன. அதற்குப் பிறகுதான் சுப்பிரமணிக்கு ஞானோதயம் பிறந்தது. தமது ஒரு ஏக்கர் நிலத்தில் முந்திரி பயிரிட்டார். அவை வளரும் வரை ஊடுபயிரில் உழைத்தார். கூடவே, சிறு விவசாயிகளிடமிருந்து முந்திரி வாங்கி, லாபத்துக்கு விற்கும் வியாபாரத்தையும் துவங்கினார். நாலைந்து வருடங்களில் சுப்ரமணியத்தின் கனவு நனவானது: இரண்டரை லட்சம் ரூபாயில் ஒரு மாடி வீடு. வலம் வருவதற்கு வசதியாக டி. வி. எஸ் 50 — நித்திய கண்டம் பூர்ணாயிசு என்று அல்லாடாத ஸ்திரமான வாழ்க்கை — இவை கைகூடியுள்ளன இந்த பண்ருட்டி விவசாயிக்கு.

பண்ருட்டி பகுதி மக்கள் ஒவ்வொரு வரது உயர்வுக்குப் பின்னும் ஏதோ ஒரு வகையில் இந்த முந்திரித் தோப்புகள் கிளை பரப்பி நிழல் விரித்து நிற்கின்றன. இவ்வூரின் கெடிலம் ஆற்றுக்குத் தெற்கே சுமார் 25 கிலோ மீட்டர் தூரம் வரை குடை போல் பச்சைப் பசேலென்று படர்ந்துள்ளன முந்திரித் தோப்புகள். ஒவ்வொரு சிறு விவசாயியும் இரண்டு முதல் பத்து ஏக்கர், ஒவ்வொரு பெரிய விவசாயியும் ஐம்பது முதல் நூறு ஏக்கர் என்று சராசரியாகப் பயிரிட்டுப் பலன் பெறுகிறார். இந்தப் பகுதியில் நிலத்தின் விலை, ஏக்கருக்குச் சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய்! ஆனாலும் யாரும் நிலம் விற்க முன் வருவதில்லை! முந்திரி பயிரிட்டு லாபத்தை அறுவடை செய்கிறார்கள்.

''எங்க மண் வாங்கி வந்த வரம் சுவாமி இது! வானம் பார்த்த பூமிதான்; ஆனாலும் வரம் வாங்கி வந்த மண்ணு...'' என்கிறார் சிறு விவசாயி சூசைமரி.

''போன வருஷம் பத்து மூட்டை முந்திரி எடுத்தேன். மூட்டைக்கு 1500 ரூபாய் குறைந்தபட்ச விலை. அறுவடை செய்ததும் தோப்புக்கே வந்து வாங்கிட்டுப் போயிடறாங்க. இந்தப் பயிருக்கு என்ன செலவு செய்யப் போறோம்... பிப்ரவரியில் பூக்கிற போது பூச்சி மருந்து வாங்கித் தெளிக்கணும்; அப்புறம் மாட்டு எரு, யூரியா, காம்ப்ளெக்ஸ் உரம்... எல்லாமாச் சேர்ந்தா' ஏக்கருக்கு ஆயிரம் ரூபாய்க்குள்ளதான் செலவாகும். மழை நல்லா பெய்தால் நல்ல மகசூல் கிடைக்கும். மழை இல்லாட்டியும், பகவான் புண்ணியத்துல, பயிர் ரொம்ப பாதிக்கப்படாது. அதனால, கிணறு, பம்பு செட்டுனு உபத்திரவப்பட வேண்டாம். நாங்க பாட்டுக்கு ஓடு உடைச்சு எக்ஸ்போர்ட் கம்பெனிக்கு அனுப்பிக்கிட்டே இருப்போம்'' என்று கூறும் சூசைமரி மூன்று ஏக்கரில் முந்திரி பயிரிட்டுள்ளார்.

'ஓடு உடைப்பது' என்று விவசாயிகள் குறிப்பிடுவது முந்திரிப் பழத்திலிருந்து பருப்பை அகற்றுவதைத்தான். சின்னதாய் ஓர் ஊசியை வைத்துக் கொண்டு முந்திரிப் பழத்தின் ஓட்டைக் குத்தி, உடைத்து பருப்பை நீக்குகிறார்கள். உடைக்கின்ற போது அதிலிருந்து வெளிப்படும் ஒருவித மான பால் கையில் பட்டு விட்டால் புஸுபுஸுவென்று பெரிசு பெரிசாகக் கொப்பளங்கள் கிளம்பி விடுகின்றன. பார்க்கவே விகாரமாய் இருக்கிறது. ஆனாலும், பல குடும்பங்களில் பெண்கள் கைகளில் எண்ணெய் தடவிக் கொண்டோ ஈரத் துணியைச் சுற்றிக் கொண்டோ, பல்லாங்குழி தாயம் ஆடுவதைப் போல் இந்த வேலையையும் பொழுதுபோக்காகச் செய்து வருகிறார்கள். இந்த வேலையைச் செய்வித்துத் தருவதற்குத் தனியாக ஏஜெண்டுகள் உண்டு. இவர்கள் வீடு வீடாகச் சென்று கொட்டைகளை நிறுத்துப் போட்டு விட்டுப் போய்

விடுவார்கள். தனியே நீக்கியெடுக்கப்படும் பருப்பின் அளவுக்கு ஏற்றபடி கூலி தரப் படும். கொட்டையிலிருந்து நீக்கிய பருப்பு மூன்று நாட்களுக்கு நிழலில் உலரும். பிறகு, முந்திரி ஏற்றுமதி செய்யும் கம்பெனிகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

பண்ருட்டியிலிருந்து முந்திரி எப்படி ஏற்றுமதியாகிறது என்று விளக்கினார் பி. எஸ். இன்டர்நேஷனல் உரிமையாளர் ஜெயராமன்:

''விவசாயிகளிடமிருந்து வாங்கிய ராசிப் பயிரை (கொட்டையிலிருந்து நீக்கப்பட்டு, மேல் - தோலுடன் விளங்கும் முந்திரிப் பருப்பு) முதலில் தரம் பிரிக்க வேண்டும். பருப்பின் அளவு, நிறம், அதன் மேல் தோலின் சுருக்கம் — இவற்றை அடிப்படையாகக் கொண்டு இருபது வகைகளாகப் பிரிப்போம். தரம் பிரிப்பதற்கென்றே எங்கள் கம்பெனியில் நாற்பது பெண்கள் வேலை செய்கிறார்கள்.

''தரம் பிரிக்கப்பட்ட பருப்பைச் செயற்கை முறையில் சூடுபடுத்துவோம். பெரிய, உலை போன்ற - அடுப்பின் கீழே விறகுகளைப் போட்டு எரிப்போம். மேலே பல அடுக்குகளில் சூடு பரவும். ஒவ்வொரு அடுக்கிலும் முந்திரிப் பருப்பு நிரம்பிய 'ட்ரே' இருக்கும். ஈரம் நீங்கிப் பதமாகிற வரை, கச்சிதமாகப் பருப்பைச் சூடேற்றுவோம்.

''பதப்படுத்தப்பட்ட பருப்பு மீண்டும் தரம் பிரிக்கப்பட்டு, கடலூரில் உள்ள தரக் கட்டுப்பாட்டு நிலையத்துக்கு அனுப்பப் படும். தரக்கட்டுப்பாட்டுச் சோதனைகளில் தேறிய பிறகு, அவற்றுக்கு ஏற்றுமதிக்கு உகந்தவை என சர்டிபிகேட் வழங்கப்படும். சான்று பெற்ற பருப்பை மீண்டும் தொழிற் சாலைக்குக் கொண்டு வந்து காற்றுப்புகாத டின்களில் அடைத்து, தரச் சான்றிதழையும் இணைத்து, சென்னைத் துறைமுகம் வழியே வெளிநாடுகளுக்கு அனுப்பி விடுவோம்.

''சிங்கப்பூர், கோலாலம்பூர், ஆஸ்திரேலியா, அமெரிக்கா, ஜெர்மனி, துபாய் என்று உலகம் முழுவதற்கும் ஏற்றுமதி செய்கிறோம். இந்தியாவிலேயே முந்திரி ஏற்றுமதியில் இரண்டாவது இடம் வகிப்பது பண்ருட்டி. எங்கள் கம்பெனி மட்டும் மாதந் தோறும் 25 லட்சம் ரூபாய் பெறுமான முள்ள சரக்குகளை ஏற்றுமதி செய்கிறது. பண்ருட்டியில் மட்டும் எங்களைப் போல் பதினான்கு ஏற்றுமதி நிறுவனங்கள் இருக் கின்றன. அப்படியானால் பண்ருட்டியி லிருந்து மாதம்தோறும் எவ்வளவு ரூபாய் பெறுமானத்துக்கு ஏற்றுமதியாகிறது என் பதையும், எவ்வளவு அந்நியச் செலாவணி



• சுப்பிரமணி: ''இனி கவலையில்லை.''

• சூசைமரி: ''மண் வாங்கிவந்த வரம்.''





• பச்சைக் குடை விரித்தாற்போல்...: முந்திரி மரம்.



●● அழகு என்பது அன்பே. உடலில் மெய்யாக நிற்பது குணமே. உடலின் ரூபமும் விரூபமும் விவாகமாகும் வரையில் தான். விவாகம் முடிந்து இருவர் உள்ளமும் அன்புடன் கூடியதும் முகமும் உடலும் எங்கோ மறைந்துவிடும். இந்த உண்மை ஆணுக்கும் ஒன்றே; பெண்ணுக்கும் ஒன்றே! "அவள் மூக்கைப் பார்," "அவன் பல்லைப் பார்," "வாயைப் பார்" என்பது எல்லாம் மற்றவர்களுடைய பேச்சும், தகராறும். அன்பு கண்ட தம்பதிகளுக்கு மூக்கும் வாயும் தீர்ந்து போன விஷயம்.

— ராஜாஜி.

தகவல்: ஆர். தனலட்சுமி.

பெற்றுத் தருகிறது என்பதையும் நீங்களே கணக்குப் போட்டுப் பாருங்கள்" என்றார் ஜெயராமன்.

ஜெயராமன் போடச் சொன்ன பெரிய கணக்குக்குப் பயந்து, அவசர அவசரமாக அவரை வாழ்த்தி விட்டு, வீதிக்கு இறங்கினோம். முந்திரிப் பயிர் தரும் வேலை வாய்ப்புக்கள் குறித்துச் சில பொது மக்களிடம் கேட்டோம்.

"நான் இருபது வருஷமா முந்திரிப் பருப்பைத் தரம் பிரிக்கிற வேலையைச் செய்யறேன். கொஞ்சம் பழகிட்டால் ரொம்பச் சுலபமான வேலை. ஒரு எடை (மூன்று கிலோ) பருப்பு பிரிச்சா எழுபத்தைந்து பைசா கூலி. பெரியவங்க ஒரு நாளைக்கு நாற்பது, ஐம்பது எடை கூடப் பிரிக்க முடியும்" என்றார் சாந்தா.

"இது நோகாத வேலைங்க... வெயிலில் அலைய வேண்டியதில்லை." "அதிகம் படிப்பு தேவையில்லை." "காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு கமல், அமலா பற்றிப் பேசிக்கிட்டே வேலை செய்யலாம்" "பொழுது சாயறதுக்குள்ளே முப்பது நாற்பது ரூபாய் சம்பாதிக்கலாம்" — என்று பல்வேறு கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன.

"'வேலைக்கு ஆள் தேவை'ன்னு போர்டு போட்டால் கூட கிடைக்க மாட்டேங்கறாங்க" என்று சில ஏற்றுமதி நிறுவன நிர்வாகிகள் கூறினார்கள்.

ஒவ்வொரு கம்பெனியிலும் 450 முதல் 500 பெண்களும் நூறு ஆண்களும் வேலை செய்து வருகிறார்கள். மொத்தத்தில் சுமார் பத்தாயிரம் குடும்பங்கள் பயன் பெறுகின்றன.

இந்த நேரடி வேலை வாய்ப்புக்கள் தவிர, முந்திரி ஏற்றுமதியால் பல மறைமுகமான வேலை வாய்ப்புக்களும் உண்டு.

முந்திரி 'லோடு' ஏற்றிச் செல்வதற்கென்றே பேங்க் லோன் போட்டு, டெம்போ வாங்கி ஓட்டுபவர்கள் உண்டு. முந்திரி டின்களைப் பேக் செய்யத் தேவைப்படும் அட்டைப் பெட்டிகள், மதுரை, விருதுநகர் பகுதியில் குடிசைத் தொழிலாகத் தயாரிக்கப்பட்டு வருகின்றன.

முந்திரி ஏற்றுமதியை ஊக்குவிக்க அரசு பலவிதமான சலுகைகளை வழங்கியுள்ளது. முந்திரி ஏற்றுமதி நிறுவனங்களுக்கு வங்கிகளில் சராசரிக்கும் குறைந்த வட்டியில் கடன் தரப்படுகிறது. நூறு சதவிகிதம் ஏற்றுமதி செய்கின்ற நிறுவனங்களுக்குப் பூரண விற்பனை வரி விலக்கு அளித்துள்ளது. உள்நாட்டு விற்பனைக்கும் மிகக் குறைவான வரிதான்.

பண்ருட்டி மற்றும் அதன் சுற்று வட்டாரங்களில் நூற்றுக்கும் மேற்பட்ட எண்ணெய்த் தொழிலகங்களில் முந்திரித் தோலைச் சூடுபடுத்தி, சி. என். எஸ். ஆயில் எடுக்கிறார்கள். இந்த எண்ணெய் பெயிண்ட், பிரேக் லைனிங், சன்மைக்கா போன்றவை தயாரிக்கப் பயன்படுகிறது.

இனி முந்திரிக் கொட்டை என்று யாரை யாவது ஏச மனம் வருமோ? பொன்னான அந்நியச் செலாவணியை ஏராளமாய்ப் பெற்றுத் தரும் முந்திரி மரங்கள் பச்சைக் குடை விரித்தது போல் படர்ந்து பண்ருட்டியின் வளமைக்கும் பெருமைக்கும் சான்றாக நிற்கின்றன.

— பாரதிபாலன்

வண்ணப்படம், புகைப்படங்கள்: யோகா

இக்கட்டுரைக்கு யோசனை வழங்கித் தகவல் சேகரிப்பதில் உதவிய வாசகர்:



கே. பூபதி,
பண்ருட்டி.



ஒளிரும் வண்ணங்கள்... மகிழும் உள்ளங்கள்...




"ஸ்டாண்டர்டு"
ஃபையர்வர்க்ஸ்



தீபாவளித் திருநாளில், வானவில்லின்
வண்ண ஜாலத்தில் இந்தப்
புதுமைகளையெல்லாம் கண்டு மகிழுங்கள்:
ஸ்டாண்டர்ட் மத்தாப்புகள், ஜிம்மி
வண்ண மத்தாப்புகள், ரெட் ஃபோர்ட்
அசோகா, பல வண்ண காண்டில்கள்,
கிளிட்டர் பாக்ஸ் வண்ண வரிசை
மத்தாப்புகள், (சீரியல் கலர்டு ஃபிளேர்ஸ்)
சப்மெரைன் ஜெட், இன்னும்
எத்தனையோ —
அத்தனையும் வழங்குவது ஸ்டாண்டர்ட்
ஃபையர்வர்க்ஸ்.

நாடெங்கும் வண்ணமயமாய் மின்னும் ஜாலம்

Artig/SFW/ 593

## COUNT DOWN — 13

# கண்ணீரில் கரைந்த நிலவு!

**அஞ்சனா மைக்கேல்ராஜ்**

> உலகின் ஓராயிரம் பாஷைகளினி ருந்து வேறுபட்டது ஒற்று அமைப் புக்களின் ரகசிய பாஷை. மிக எளி தாக உடைக்கக் கூடிய கணக்குகள் முதல் ராட்சஸ கம்ப்யூட்டர்களால் மட்டுமே பகுத்து உணரக்கூடிய கடினமான புதிர்கள் வரையில் பல வகைச் சங்கேதங்கள் இந்த பாஷை களில் பயன்படுத்தப்படும்.
>
> — ஆல்வா தாமஸ்.

"குட்மார்னிங் கர்னல், அண்ணன் இரும்பி விட்டார்தானே?''

சாந்தினியின் குரலில் இருந்த துள்ளல் மறுமுனையின் மௌனத்தால் சிதைந்தது.

''கர்னல்?'' என்றாள் கவலை நனைத்த குரலில். ''அண்ணனுக்கு ஒன்றுமில்லையே?"

''அமீர்ஜவஹர் வந்து விட்டான் சாந் தினி... 'ஆனால்...''

''கர்னல், எனக்குப் பயமாக இருக்கிறது கர்னல்.. சொல்லுங்கள்.. ஆனால் என் றால்?''

''அச்சுதன் விசேஷ ஹெலிகாப்டரில் அமீர் ஜவஹரை டில்லிக்குக் கொண்டு வரு கிறான் சாந்தினி...''

விசேஷ ஹெலிகாப்டர். அமீர் ஜவஹ ரைக் கொண்டு வருகிறான்!

சாந்தினி நடுங்கிச் சிதறிப் போனாள். ஒரு சுழலின் மையத்தில் எறியப்பட்ட மலரைப் போலக் கலங்கினாள். நாற்காலி யின் விளிம்பைப் பிடித்துக் கொண்டு சரியா மல் நின்றாள்.

''கர்னல்... அண்ணனுக்கு என்ன ஆயிற்று?''

''எதிரிகளை ஜெயித்து விட்டு வந்தவன் இங்கே ஒரு நண்பனிடம் தோற்றுப் போனான். மணிமாறன் என்ற துரோகி அவனைச் சுட்டு விட்டான்.''

சாந்தினியின் நிழல் சுவரில் சரிந்தது. நாற் காலி கவிழ்ந்தது. டெலிஃபோன் கீழே இழுக்கப்பட்டு மோதியது.

''சாந்தினி.. சாந்தினி.. சாந்தினி..'' என்று ரிசீவர் விடாமல் அழைத்துக் கொண்டே இருந்தது.

ஜலந்தரில் மணிமாறன் லாரியிலி ருந்து குதித்து இறங்கிய போது மாலை மயங்கத் துவங்கியிருந்தது. இடையில் நான்கு இடங்களில் செக்போஸ்டில் அவன் இடுப்புத் துப்பாக்கியைத் தளர்த்தித் தயாரா கியும், உபயோகிக்க வேண்டிய அவசியமில் லாமல் லாரி அனுமதிக்கப்பட்டு விட்டது.

டிரைவருக்கு நன்றியைத் தெரிவித்து விட்டு மணிமாறன் தெருவோரம் நடந்தான்.

குடிசைகள் நிறைந்த பகுதி. பன்றிகள் வால்களால் விசிறிக் கொண்டு குப்பை மேய்ந்தன. சில குழந்தைகள் அழுக்காக இருந்தன. அவை ஒரு மெலிந்த குச்சியை வைத்துக் கொண்டு நாய்க் குட்டியைத் துரத் திச் சிரித்துக் கொண்டிருந்தன.

ஒரு மாதிரி, இரும்பை இரும்பு மோதும் சப்தம் கேட்ட திசையில் மணிமாறன் நடந் தான். நசுங்கியிருந்த ஒரு கார்க் கதவைப் பழுதுபார்த்துக் கொண்டிருந்த ஷர்மா, நீளமான நிழல் குறுக்கிட்டதும் நிமிர்ந்தான். வியர்வை பின்னிய முகத்தில் கண்கள் சுருங் கின.

மணிமாறன் இரண்டு வலது கை விரல் களைக் கத்தரி போல் பிடித்து, இடது சுட்டு விரலை வெட்டினான்.

பார்த்ததும் ஷர்மாவின் உடம்பில் விறைப்பு கூடியது.

சங்கேத சைகை.

கையில் வைத்திருந்த சுத்தியலை, கூட வேலை செய்து கொண்டிருந்தவனிடம் கொடுத்து விட்டு வெளியே வந்தான்.

''என்னைத் தெரியவில்லை?''





''உம்... எனக்கு அதிர்ஷ்டமில்லே... உன் அப்பா உயிரோடு இருந்திருந்தார்னா தலைதீபாவளிக்கு எனக்கு நிறைய செஞ்சிருப்பார்...''

''போதுமே...தலைதீபாவளிக்குச் செய்யணுமேங்கிற பயத்திலேதான் அப்பாவே இறந்தார்...''

— ராஜேஸ்வரி.

''மணிமாறன்!''

''மிக, மிக, மிக அவசரம். உடனே கூண்டுக்குப் போவோம். வா''

ஷர்மா திரும்பித் தன் சகாக்களிடம் உத்தரவுகள் கொடுத்து விட்டு வெளியே வந்து, ஒரு துருப்பிடித்த மோட்டார் சைக்கிளை நிமிர்த்தினான்.

மோட்டார் சைக்கிள் ஜலந்தரின் சில சிக்கலான சாலைகளில் துரிதமாகச் சென்றது. கடை வீதியின் பின்புறம் நிழலாய் இருந்த ஒரு சந்தில் நுழைந்தது. அவசர முற்றுப் புள்ளியாய் முடிந்து விட்ட சந்தின் கடைசிக் கட்டடத்தின் வாயிலில் நின்றது. கார்ஷெட் போன்ற அமைப்பின் மடி கதவை ஷர்மா மேலுயர்த்தினான். கதவு சுருண்டது.

உள்ளே நுழைந்ததும் சுருண்ட கதவை இழுத்து மூடினான். இருள் கவிழ்ந்தது.

ஸ்விட்ச் தட்டி விளக்கு எரிந்ததும், ஒரு கார் புலப்பட்டது. விபத்தில் எரிந்தது போல் வர்ணமிழந்து. அங்கங்கே துருப்பிடித்த கதவுகள். இருக்கைகளில் குஷன் கிழிந்து, எலும்பும் சதையுமாக ஸ்ப்ரிங்குகளும், வறட்டு நாரும் தெரிந்தன.

ஷர்மா காரின் இயந்திரத்தை மூடியிருந்த எஃகுக் கதவைத் தூக்கினான்.

காரின் மின்கலத்தை அதன் பிடிப்புகளிலிருந்து விடுவித்தான்.

தூக்கிக் காரின் மீது வைத்தான். மின்கலத்தின் இருபுறமும் பிடித்து உலுக்கி உயர்த்தினான். கவிழ்த்து மூடியது போல செவ்வக வடிவிலிருந்த மூடி கழன்றது.

உள்ளே ஒரு ஸ்பீக்கரும், மைக்கும் இருந்தன. உரிய இடத்தில் அழுத்தியதும் ஒரு வெட்ட மானியில் முள் துடித்தது.

''நான் சற்று ரகசியமாகப் பேச வேண்டும், ஷர்மா.''

''செய்!'' — ஷர்மா ஷட்டர் திறந்து வெளியேறினான்.

மணிமாறன் முள்ளைத் திருப்பினான். தனக்குத் தேவையான எண்களில் அது நிலைத்ததும், பச்சை நிறக் குமிழை ஏழு தரம், மூன்று தரம், ஒரு தரம் என்று வேகமாகத் தட்டினான்.

பாகிஸ்தானின் ரகசிய கம்யூனிகேஷன் பிரிவில் இந்தச் சங்கேத ஒலிக்கடத்தல் சரிபார்க்கப்பட்டுப் பதில் வரக் காத்திருந்தான்.

பதில் வந்தது.

''மணிமாறனா?'' மேஜர் நாஸரின் குரல்.

''ஆம். பாதுகாப்பான இடத்திலிருந்து பேசுகிறேன்.''

''உன்னிடம்தானே இருக்கிறது?''

''ஆம்.''

''அதைத் திறக்காதே. பிரிக்காதே. ஆராய்ச்சி செய்யாதே.''

''செய்யவில்லை.''

''அதில் மிக மிக முக்கியமான சில தகவல்கள் அடங்கியிருப்பதால் அதிக நேரம் உங்கள் தேசத்தில் இருப்பது ஆபத்து.''

''எல்லையை மூடி விட்டார்கள்.''

''தெரியும். முட்டாள்தனமான சாகசம் எதிலும் ஈடுபடாதே. அதன் பத்திரம் மிக முக்கியம். வார இறுதிக்குள் சேர்ப்பித்து விடு.''

''யாரிடம், எங்கே சேர்ப்பிக்க வேண்டும்?''

''காகிதம் எடுத்துக் கொள்.''

மணிமாறன் தன் ஜிப்பாவின் பாக்கெட்டிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்தான். பேனாவை எடுத்தான்.

''குறிப்பெடுக்க நான் தயார்'' என்றான்.

சங்கேத எழுத்துக்கள் மறுமுனையில் இருந்து ஒலிக்க ஆரம்பித்தன.

N Z W I Z H

H V O E Z N Z M R

W Z M X V I

''எல்லாம் கிடைத்ததா?''

''கிடைத்தது'' என்றான் மணிமாறன்.

மேஜர் நாஸரின் குரல் தயங்கியது. எதையோ கேட்க வந்து, கேட்காமல் விட்ட மாதிரி.

''வேறு ஏதாவது உண்டா சார்?''

''அமீர்ஜவஹரைப் பற்றிய ஒரு செய்தியைப் பிக்-அப் செய்தேன். அவன் உடலைக் கண்டெடுத்ததாக. உண்மையா?''

# தகதக தங்கப் பட்டுடன் தழுவுது தங்கப் பட்டுடல்

இப்போது, தூய தேங்காயெண்ணெய் வளம் செறிந்து வரும் புதிய ரெக்ஸோனா: உங்கள் தங்கப் பட்டுமென்மை, பட்டொளி மெருகு, மோகனப் புதுமணம், புது வடிவம், உமதாசை தீர்க்கும் அனைத்து குண சோப் புது ரெக்ஸோனா. இப்போது, 150 கிராம், பெரிய ஸைசிலும் கூட.



தூய தேங்காயெண்ணெய் செறிந்தது.

ரெக்ஸோனா

பொன்னுன மென்பட்டு மேனி மெருகுக்கே

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

LINTAS RX P2 2416 TM

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு
எஸ். செல்வ கணேஷ்

WRITE PIN CODE IN ADDRESS




விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு
சென்னை
PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.

''துரோகிகளுக்குக் கொடுக்கும் பரிசு. அதை நானே கொடுத்தேன் ஓவர்.''

''கடவுள் பெரியவர். ஓவர்.''

தொடர்பு அறுந்தது. ரிசீவரில் கடைசியாகக் கேட்டது ஒரு விம்மலின் துணுக்கோ என்ற சந்தேகம் மணிமாறனுக்கு எழுந்தது.

'ப்ச்' என்று உதட்டைப் பிதுக்கினான். தோள்களைக் குலுக்கிக் கொண்டான்.

சங்கேத எழுத்துக்களைப் பேப்பரிலிருந்து மனத்திற்குள் அர்த்தமுள்ள எழுத்துக்களாக மாற்றினான்.

மெட்ராஸ்.

செல்வமணி.

டான்ஸர்.

மெட்ராஸ்!

எங்கேயிருக்கிறது ஜலந்தர்? எங்கேயிருக்கிறது மெட்ராஸ்?

தன்னிடம் மிக முக்கியமான பொறுப்பு மிக நீண்ட பயணத்தினூடே கொடுக்கப்பட்டிருப்பது அவனுள் மிக மெலிதான உதறலை ஏற்படுத்தியது.

**சா**ந்தினி ஜன்னலுக்குக் கீழே உட்கார்ந்திருந்தாள்.

வெளியே திட்டுத் திட்டாக ஆக்ரமித்த இருள் அவள் மனத்திலும் கூடாரம் அடித்திருந்தது.

அமீர் ஜவஹர் இல்லை. இனி அவன் இல்லை.

அந்த இழப்பு, மூளையில் செய்தியாகப் பதிந்த பின்னரும், காலடி சப்தங்களில் அவனைத் தேடி நம்பிக்கை இழந்தாள். போன் ஒலித்த போது ரிசீவரில் அவன் குரல் எதிர்பார்த்துக் கலைந்து போனாள்.

கதவு தட்டப்பட்டது.

அமீர் ஜவஹர் என்ற நப்பாசையுடன் தான் சென்றாள். கதவைத் திறந்தாள்.

கதவுக்கு வெளியே அச்சுதன் நின்றிருந்தான்.

சாலையின் திருப்பத்தில் கார் ஒன்று நகர்ந்த போது அதன் ஒளி வெள்ளத்தில்



அவனுடைய நிழல் வீட்டிற்குள் நீண்டு அவள் பாதங்களை வருடியது.

ஷூக்களைக் கால்களாலேயே நெம்பிக் கழற்றி விட்டு அவன் நுழைந்தான்.

"சாந்தினி.."

சிதைந்த குரலில் பிறந்த அந்த அழைப்பில் மிகுந்த இரக்கம் இருந்தது.

சாந்தினி நின்ற நிலையிலேயே விம்மினாள்.

"சாந்தினி... அழாதே.."

சாந்தினி முகத்தைச் சுவர் பக்கம் திருப்பிக்கொண்டாள். விம்மல் அதிகமாகியது.

"சாந்தினி... அமீர் இறந்து போனது உனக்கு மட்டும் நஷ்டம் இல்லை சாந்தினி. எங்களுக்கும்தான். நான் ஒரு நல்ல நண்பனைத் தொலைத்து விட்டுத் தவிக்கிறேன்."

"இனிமேல் எனக்கு யார் இருக்கிறார்கள்? அண்ணன் செத்துப் போன செய்தியைக் கேட்டவுடனேயே என் உயிரும் போயிருக்க வேண்டும்."

"அழாதே சாந்தினி...

"நீங்கள் அத்தனை பேரும் சேர்ந்து என் அண்ணனைக் கொன்று விட்டீர்கள்."

"இல்லை சாந்தினி... அவனை நாங்கள் சாவதற்காக அனுப்பவில்லை."

"நான் தனியாகி விட்டேன்.. நான் தனியாகி விட்டேன்."

சாந்தினி வெறிபிடித்தாற் போல் திரும்பி அவனைப் பார்த்து, முகத்தில் அறைந்து கொண்டாள்.

"சாந்தினி..." என்று அவளை நெருங்கி, அவள் கைகளைப் பற்றினான் அச்சுதன்.

அவள் கண்களில் கண்ணீர்ப் படலத்தின் பின்னால் ஒரு மருட்சி இருந்தது. கூட்டத்திலிருந்து பிரிந்த மானின் தனிமை தெரிந்தது.

அச்சுதன் அவளது கன்னத்தில் வழிந்த நீரைச் சுண்டினான். அவளது துடித்த, மென்மையான உதடுகள் அவனது மணிக்கட்டைத் தற்செயலாகத் தீண்ட, அச்சுதன் இதுநாள் வரை உணராத ஒரு புது அனுபவத்தை உணர்ந்தான்.

"சாந்தினி..." என்றான் அதே சிதைந்த குரலில்.

சாந்தினி பெரிய விழிகளால் அவன் முகத்தில் ஆதரவு தேடினாள்.

அவன் விரல்கள் ஆதுரத்துடன் அவள் முகவாயைப் பிடிக்க, அவள் இமைகள் மூடி, கடைவழியே கண்ணீர் முத்துக்களை உதிர்த்தன.

"சாந்தினி! கரையேண்டா. நினக்கு ஞான் உண்டு..."

(தொடரும்)

# இப்போது, விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.

இப்போது ஏறக்குறைய பாதி விலையில் கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம்.... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பைகளிலே!

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| பேக் | 100 கிராம் விலை |
|---|---|
| 500 கிராம் கேனிஸ்டர் | 145 பைசா |
| 7.5 கிலோ கேரிபேக் | 83 பைசா |




உபயோகிப்பிலேயோ மேலும் சிக்கன லாபம் கிடைக்கிறது இதில் உங்களுக்கு. ஒரு துளியளவு விம் உபயோகித்தாலும் நுரை பொழிந்து பிசுக்குகளை விலக்கி வெளியேற்றுகிறது கணங்களாக... அதிகப் பாத்திரங்களைத் துலக்குகிறது ஒளிமினுக்க.

விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைகளுக்கேற்ற அளவிலே (தேர்ந்தெடுக்கக் கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 7.5 கிலோ பேக்குகள்)

## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்

LINTAS-VG-482A-2519 TAM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# சிவகாமியின் சபதம்

இருபத்தோராம் அத்தியாயம்

## சித்தர் மலைச் சித்திரம்

ப

திணைந்துவிதமான அபிநயப் பார்வைகளிலே சந்தேகமும் அருவருப்பும் தோன்றும் பார்வையைச் சிவகாமி புத்த பிக்ஷுவின் மேல் ஒருகணம் செலுத்திவிட்டு, ஆயனரைப் பார்த்து, "இவர்கள் இத்தனை நேரமும் இங்கேதான் இருந்தார்களா?" என்று கேட்டாள்.

"ஆம், குழந்தாய்!"

"புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்திருந்தார்களா?"

"ஆமாம்! ஆனால், இதைக் குறித்து நீ என்னவோ ஏதோ என்று சந்தேகப்பட வேண்டாம்...."

ஆயனர் மேலே சொல்லுவதற்குள் சிவகாமி, "புத்த பகவானுடைய சிலைகளைப் பிரும்மாண்டமாய்ச் செய்வதில் எவ்வளவு உபயோகம் இருக்கிறது!" என்றாள்.

"அதனாலேதான் மகாயான சித்தாந்தத்தை ஏற்படுத்திய நாகார்ஜுன பிக்ஷுவை நான் போற்றுகிறேன்" என்றார் நாகநந்தி.

பு

த்த மதம் ஸ்தாபிக்கப்பட்டுச் சில காலம் வரையில் புத்த பகவானுடைய சிலைகள் அமைப்பதும் சித்திரங்கள் எழுதுவதும் தடுக்கப்பட்டிருந்தன. இந்த வரலாறு நடந்த காலத்துக்கு இருநூறு வருஷத்துக்கு முன்னால், நாகார்ஜுன பிக்ஷு என்னும் மகான் தோன்றி மகாயான புத்த சித்தாந்தத்தை ஸ்தாபித்தார். பாரதநாட்டின் வடகோடியில் நாலந்தா என்னும் நகரில் பிரசித்தி பெற்று விளங்கிய பௌத்த மடத்தின் தலைவரான நாகார்ஜுனர் தேசமெங்கும் யாத்திரை செய்து, வாதப்போர் நடத்தி மகாயான சித்தாந்தத்தைப் பிரசாரம் செய்தார். ஆங்காங்கே ஸங்கிராமம் என்ற பெயரால் வழங்கிய பௌத்த மடங்களையும் நிறுவிக்கொண்டு போனார். அத்தகைய ஸங்கிராமம் ஒன்றை அவர் கிருஷ்ணா நதிக்கரையிலுள்ள ஸ்ரீபர்வதத்திலும் ஸ்தாபித்தார். அதுமுதல் ஸ்ரீபர்வதத்துக்கு நாகார்ஜுனமலை என்ற பெயரும் வழங்கலாயிற்று.

நாகார்ஜுனர் ஸ்தாபித்த மகாயான பௌத்த மதம், புத்த பகவானுடைய சிலைகளை அமைப்பதற்கும் கோயில்கள் கட்டுவதற்கும் அநுமதித்தது. "நாகார்ஜுன பிக்ஷுவைப் போற்றுகிறேன்" என்று நாகநந்தி இரண்டுமுறை கூறியதன் கருத்து என்ன என்பது இப்போது நன்கு விளங்குகிறதல்லவா?

நா

கநந்தி கூறியதைப் பொருட்படுத்தாமல்சிவகாமி, "அப்பா! இவர்கள் எதற்காக ஒளிந்துகொண்டிருந்தார்கள்?" என்று கேட்டாள்.

"அம்மா! நம் நாகநந்தி அடிகள் இராஜ குலத்தினரைப் பார்ப்பதில்லை என்று விரதம் வைத்துக் கொண்டிருக்கிறார். உனக்குத் தெரியாதா? இந்த வாலிபன் அவருடன் வந்திருந்தபடியால்..."

"அப்பா! சக்கரவர்த்தியும் மாமல்லரும் இவரைப் பார்த்திருந்ததால் எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார்கள்? ஒன்று கவனித்தீர்களா? மாமல்லர் கையில் ஒரு வேல் வைத்திருந்தாரே? அது இந்த வீரருடைய வேல்தான்...."

நாகநந்தி மீண்டும் குறுக்கிட்டு, "அதில் என்ன வியப்பு, சிவகாமி! இப்போதுதான் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஆயுதம் தேவையாயிருக்கிறதே? ஊரிலுள்ள உடைந்த வேல், வாள், ஈட்டி எல்லாவற்றையும் தேடிச் சேகரிக்கிறார்களே?" என்றார்.

சிவகாமி அவரை எரித்துவிடுவது போல் பார்த்துவிட்டு, "அப்பா! குமார சக்கரவர்த்தி இந்த வீரரிடம் திருப்பிக் கொடுப்பதற்காகவே அந்த வேலைத் தம் கையிலே வைத்திருக்கலாம். சுத்த வீரத்தைப் பாராட்டுவதில் மாமல்லரைப்போல் யார் உண்டு? இவரை நீங்கள் சக்கரவர்த்தியின் சமூகத்துக்கு உடனே அழைத்துப் போக வேண்டும்" என்று கூறினாள்.

ஆயனர் தட்டுத் தடுமாறி, ஆகட்டும் "அம்மா! என் உத்தேசமும் அதுதான். பரஞ்சோதி வடக்கே போய்த் திரும்பி வந்ததும் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போகிறேன்" என்றார்.

சக்கரவர்த்தி வந்திருந்த சமயத்தில் சிலையின் பின்னால் ஒளிந்திருக்க நேர்ந்த அவமானத்தினாலும், சிவகாமியின் விஷயத்தில் ஏற்பட்ட இயற்கையான சங்கோஜத்தினாலும் இத்தனை நேரம் பரஞ்சோதி உள்ளமும் உடலும் குன்றி மௌனமாயிருந்தான். ஆனால், சிவகாமி பரிந்து கூறிய வார்த்தை அவனுடைய ஆன்மாவையும் நாவையும் கட்டியிருந்த தளையை அறுத்த மாதிரி இருந்தது. அவன் சிவகாமியை நன்றியுடன் நோக்கிவிட்டு, ஆயனரைப் பார்த்து, "ஐயா! தங்கள் குமாரி சொல்வது உண்மைதான். குமாரச் சக்கரவர்த்தியின் கையிலிருந்த வேல் என்னுடைய வேல்தான் என்று எனக்குக் கூடத் தோன்றியது. அதை வாங்கிக் கொடுத்தீர்களானால் நல்லது. நெடுந்தூரம் பிரயாணம் செய்வதற்குக் கையில் ஏதேனும் ஆயுதம் அவசியமல்லவா?" என்றான்.

அப்போது புத்த பிக்ஷு, "ஆயுதத்துக்குத்தானா இப்போது அவசரம்? வேலும் ஈட்டியும் எத்தனை வேணுமானாலும் நான் சம்பாதித்துத் தருகிறேன். முக்கியமான காரியம் ஆகவில்லையே! குதிரையும் இலச்சினையும் கேட்கத் தவறிவிட்டீர்களே, ஆயனரே!" என்றார்.

"அது என் பொறுப்பு. நாளை மாமல்லபுரத்துக்கு வரும்படி சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக்கிறார். அங்கே கேட்டு வாங்கிக் கொண்டு வருகிறேன். பிரயாணத்திற்கு மற்ற ஏற்பாடுகளைக் கவனியுங்கள்" என்றார் ஆயனர்.

"அப்பா! இந்த அண்ணல் நெடுந்தூரம் பிரயாணம் செய்யப் போகிறாரா? எந்த ஊருக்கு? எதற்காக?" என்று சிவகாமி கேட்டாள்.

"நான்தான் அனுப்புகிறேன், குழந்தாய்! மிகவும் முக்கியமான காரியத்துக்காக. சென்ற ஒன்பது வருஷ காலமாக இரவும் பகலும் நான் கண்டுகொண்டிருந்த கனவு நிறைவேறப் போகிறது. சிவகாமி! இந்த உத்தம புத்த பிக்ஷுவின் உதவியினால் நிறைவேறப் போகிறது" என்று ஆயனர் கூறிய போது அவருடைய மொழிகளில் முன் போலவே ஆர்வமும் பரபரப்பும் பொங்கித் ததும்பின.

"நீங்கள் என்ன கனவு கண்டீர்கள்? அது எப்படி நிறைவேறப் போகிறது? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே?" என்றாள் சிவகாமி.

"அஜந்தா மலைக் குகையிலுள்ள அதிசய வர்ணச் சித்திரங்களைப்பற்றி உனக்குப் பல தடவை சொல்லியிருக்கிறேனல்லவா? ஐந்நூறு வருஷம் ஆகியும் அழியாத அந்த வர்ணச் சேர்க்கையின் இரகசியத்தை அறிந்து வருவதற்காகத்தான் இந்தப் பிள்ளையை என் அருமை நண்பரின் மருமகனை, வடக்கே அனுப்பப் போகிறேன்...."

"ஐந்நூறு வருஷத்து வர்ணமாவது, அழியாதிருக்கவாவது? எனக்கு நம்பிக்கைப்படவில்லை, அப்பா!" என்று சிவகாமி கூறி, சந்தேகமும் அவநம்பிக்கையும் வெளிப்படையாகத் தோன்றிய பார்வையுடன் பிக்ஷுவை நோக்கினாள்.

"அதை நம்புவது கஷ்டந்தான். முதன் முதலில் கேள்விப்பட்டபோது எனக்கும் நம்பிக்கை உண்டாகவில்லை. ஐந்நூறு வருஷம் அழியாத வர்ணம் எப்படி இருக்க முடியும் என்றுதான் எண்ணினேன். நானே கண்ணால் பார்த்த பிறகுதான் நம்பிக்கை உண்டாயிற்று!" என்றார்.

ஆயனர் இவ்விதம் கூறியதும், புத்த பிக்ஷுவும் சிவகாமியும் தங்களுடைய வியப்பை ஏககாலத்தில் தெரிவித்துக் கொண்டார்கள்.

"கண்ணால் பார்த்தீர்களா? எப்போது?" என்றாள் சிவகாமி.

"என்னிடம் இத்தனை காலம் சொல்லவில்லையே? தாங்கள் அஜந்தாவுக்

கும் போனதுண்டா?'' என்று பிக்ஷு கேட்டார்.

''இல்லை; அஜந்தாவுக்குப் போனதில்லை. ஆனால், சித்தர் மலையிலே பார்த்தேன். அடிகளே! தாங்களும் சித்தர் மலைக்குப் போய் வந்ததாகச் சொன்னீர்களே? அங்கே என்னென்ன அதிசயங்களைக் கண்டீர்கள்?'' என்று ஆயனர் வினவியதும் பிக்ஷுவின் முகத்தில் பிரகாசம் உண்டாயிற்று.

''ஆ! தெரிகிறது... சித்தர் மலைக்குகையில் ஜீன தீர்த்தங்கரர்களின் உருவங்கள் அழியா வர்ணங் கொண்டு எழுதியிருப்பதைக் கண்டேன். குகையின் வாசற்புறத்தில் இரண்டு அப்ஸர ஸ்திரீகளின் திவ்ய வடிவங்களைப் பரத சாஸ்திரத்தில் சொல்லிய இரண்டு அபூர்வ அபிநயத் தோற்றங்களில் பார்த்தேன். அவற்றை எழுதிய மகா சித்திரக்காரர் யாரோ என்று அதிசயித்தேன்...''

''யார் என்று தெரிந்ததா, சுவாமி?''

''இப்போது தெரிகிறது. அப்பேர்ப்பட்ட தத்ரூபமான ஜீவ வடிவங்களை எழுதக் கூடிய மகா சித்திரக்காரர் தென்னாட்டிலே ஆயனச் சிற்பியைத் தவிர வேறு யார்?''

''ஆம், அடிகளே! அந்த உருவங்களை எழுதியவன் அடியேன்தான். இன்னும் ஏதாவது விசித்திரத்தைக் கவனித்தீர்களா?''

''அந்த அப்ஸர மாதரின் நடன உருவங்கள் இடைக்கு மேலே பிரகாசமாய் நேற்று எழுதியவை போல் விளங்குகின்றன; இடைக்குக் கீழே வர்ணம் மங்கி விளக்கமின்றி இருக்கின்றன.''

''ஆ! ஒன்பது வருஷ காலத்தில் அதிகமாக மங்கித்தான் இருக்கும்!'' என்றார் ஆயனர். பின்னர், மேற்சொன்ன சித்தர் மலைச் சித்திரங்களைக் குறித்து ஆயனர் முன்னும் பின்னுமாகத் தட்டுத் தடுமாறிக் கூறிய வரலாறு வருமாறு:

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் மகேந்திர சக்கரவர்த்தி சமண சமயத்தினராயிருந்த காலத்தில் சோழ மண்டலத்துக்கு அவர் பிரயாணம் சென்ற போது ஆயனரையுங் கூட அழைத்துப் போயிருந்தார். உறையூரில் சோழ மன்னனுடைய உபசாரங்களைப் பெற்றுக் கொண்டு, அங்கிருந்த சித்தர் வாச மலையில் சமண முனிவர்கள் ஏற்படுத்தியிருந்த பரசித்தி பெற்ற சமணப் பள்ளியைப் பார்க்கச் சென்றார். அந்தக் குகைப் பள்ளியில் தீட்டியிருந்த வர்ணச் சித்திரங்களைக் கண்டு சக்கரவர்த்தியும் ஆயனரும் அதிசயித்தனர்.

சித்தர் மலைப் பள்ளியில் மேற்படி ஓவியங்களைத் தீட்டிய முனிவர் அச்சமயம் அங்கே வாசம் செய்து கொண்டிருந்தார். அந்தச் சித்திரங்கள் ஆயிரம் வருஷம் ஆனாலும் அழியாதவை என்று அம்முனிவர் கூறியதைச் சக்கரவர்த்தியும் ஆயனரும் நம்பவில்லை. அஜந்தா சித்திரங்களைப் பற்றி அந்த முனிவர் கூறியதையும் இவர்கள் நம்பவில்லை. அதன் பேரில் அந்தச் சமண முனிவர் ஒரு பந்தயம் போட்டார். அந்தக் கோயிலின் வாசலில் ஆயனர் இரண்டு அப்ஸர மாதரின் நடனத் தோற்றங்களை எழுத வேண்டுமென்றும், மேற்பாதி உருவங்களைத் தான் குழைத்துக்கொடுக்கும் வர்ணங்களைக் கொண்டும், இடைக்குக் கீழே ஆயனரின் சொந்த வர்ணங்களைக் கொண்டு எழுத வேண்டுமென்றும், மூன்று வருஷம் கழித்து மீண்டும் வந்து பார்த்து, தாம் கூறுவது உண்மை என்று நிச்சயிக்கப் பட்டால், ஆயனர் சமண சமயத்தை ஒப்புக் கொள்ள வேண்டுமென்றும் முனிவர் பந்தயத்துக்கு நிபந்தனை விதித்தார். அப்படி ஒப்புக் கொண்டால் மேற்படி வர்ணச் சேர்க்கையின் இரகசியத்தைச் சொல்லிக் கொடுப்பதாகவும் கூறினார்.

நிபந்தனையை ஒப்புக் கொண்ட ஆயனர் மேற்சொன்ன இரு வகை வர்ணங்களை உபயோகித்து அப்ஸர மாதர் சித்திரங்களை எழுதினார். மூன்று வருஷத்துக்குப் பிற்பாடு சித்தர் மலைக்கு மறுபடியும் போய்ப் பார்த்த போது, ஆயனர் தீட்டிய நடன உருவங்களின் மேற்பகுதிகள் அன்று எழுதியவை போல் வர்ணம் மங்காமல் விளங்கின, கீழ்ப் பகுதிகள் பெரிதும் மங்கிப் போயிருந்தன. இதனால் பெரிதும் அதிசயமடைந்த ஆயனர், நிபந்தனைப்படி சமண மதத்தைத் தழுவி, அந்த இரகசியத்தை அறிந்து கொள்ளச் சித்தமாயிருந்தார். ஆனால், நிபந்தனை விதித்த சமண ஓவியர் அப்போது அங்கு இல்லை! சக்கரவர்த்தி சைவரானது பற்றிக் கோபங்கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்திலிருந்து போய்விட்ட அநேக சமண முனிவர்களைப் போல் அவரும் போய்விட்டார்! ஆனால், அந்த அழியாத வர்ணச் சேர்க்கை



வின் இரகசியத்தை அறிந்து கொள்ளுவதில் ஆவல் இன்று வரையில் வளர்ந்து கொண்டே இருந்தது.

மேற்படி வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருந்த புத்தபிக்ஷு முடிவில் ஆயனரே! கவலை வேண்டாம்! உங்களுடைய ஆவல் நிறைவேறும் காலம் நெருங்கி விட்டது. பரஞ்சோதிக்கு நீங்கள் குதிரையும் பிரயாண அனுமதியும் வாங்கிக் கொடுப்பதுதான் தாமதம், வெகு சீக்கிரத்தில் உங்கள் மனோரதம் நிறைவேறும்!'' என்றார்.

பரஞ்சோதியும் மிக்க உற்சாகத்துடன், ''ஆம், ஐயா! தங்களுடைய மனோ ரதம் என்னால் நிறைவேறுவதாயிருந்தால் அது என்னுடைய பாக்கியந்தான். என்ன அபாயம் வந்தாலும் பின்வாங்காமல் காரியத்தை முடித்துக் கொண்டு வருகிறேன்'' என்றான்.

சிவகாமியின் உள்ளத்திலோ முரண்பட்ட எண்ணங்கள் தோன்றிப் போட்டியிட்டன. ஆயனருடைய ஆவலையும், அந்த ஆவல் நிறைவேறினால் அவர் அடையக் கூடிய மகத்தான ஆனந்தத்தையும் அவள் அறிந்து தான் இருந்தாள்; ஆனாலும், புத்த பிக்ஷுவின் தூண்டுதலால் நடக்கும் இந்தக் காரியத்தில் ஏதாவது சூதும் சூழ்ச்சியும் இருக்குமோ என்று அவள் மனம் ஐயுற்றது. ஆகவே, பரஞ்சோதியைத் தனியாகப் பார்த்து எச்சரிக்கை செய்ய வேண்டுமென்று அவள் தனக்குள்ளேயே தீர்மானித்துக் கொண்டாள்.



# இருபத்திரண்டாம் அத்தியாயம்

## சத்ருக்னன்



யனர் வீட்டிலிருந்து புறப்பட்ட மகேந்திர பல்லவர் குதிரையை விரைவாகச் செலுத்திக் கொண்டு சென்று சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த தம் பரிவாரங்களை அடைந்தார். அங்கே குதிரையைச் சற்று நிறுத்தி, கூட்டத்தில் ஒருவன் மீது பார்வையைச் செலுத்தினார். அந்த மனிதன் சக்கரவர்த்தியின் பார்வையில் இருந்த சமிக்ஞையைத் தெரிந்து கொண்டவனாய், அவரை நெருங்கி வந்து பணிவாக நின்றான்.

"சத்ருக்னா! உனக்குச் சிற்பக்கலையில் பயிற்சி உண்டா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

சத்ருக்னன் முகத்தில் எவ்வித உணர்ச்சியும் காட்டாமல், "இல்லை, பிரபு!" என்றான்.

"இவ்வளவுதானா? சிற்பக்கலையில் கொஞ்சமாவது உனக்குப் பயிற்சி இருக்க வேண்டும். அதற்கு இந்த இடத்தைக் காட்டிலும் நல்ல இடம் கிடையாது. ஆயனருடைய சிடப்பிள்ளைகள் செய்யும் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாலே போதும்."

"ஆக்ஞை, பிரபு! இப்போதே தொடங்குகிறேன்."

"சிற்பம் கற்றுக் கொள்ளப் புதிதாக வேறு யாராவது இங்கே வந்தால் அவர்களையும் நீ கவனித்துக் கொள்ள வேண்டும். ஆனால், அவர்கள் உன்னைக் கவனிக்க வேண்டியதில்லை."

"அப்படியே" என்று சத்ருக்னன் கூறிய போது அவனுடைய புருவங்கள் சிறிது மேலே சென்றன.

"நல்லது; சிற்பக் கலையைப் பற்றிப் புதிதாக ஏதேனும் தெரிந்து கொண்டால் உடனே வந்து எனக்குத் தெரிவிக்க வேண்டும்."

இவ்விதம் கூறிவிட்டுச் சக்கரவர்த்தி மீண்டும் குதிரையை வேகமாக விட்டார். அவரைத் தொடர்ந்து குமார சக்கரவர்த்தியும் குதிரையை வேகமாகச் செலுத்த, மற்ற பரிவாரங்கள் அவர்களைப் பின்தொடர முடியாமல் பின் தங்கும்படி நேர்ந்தது.

சக்கரவர்த்திக்கும் சத்ருக்னனுக்கும் நடந்த சம்பாஷணை அரைகுறையாக நரசிம்மரின் செவியில் விழுந்தது. அது அவருடைய மனத்தில் பெருங்குழப்பத்தை உண்டாக்கிற்று. சிவகாமி கூறியபடி ஆயனரின் வீட்டில் வேலெறிந்த வாலிபனைக் காணாதது மாமல்லருக்கு ஏற்கெனவே வியப்பை உண்டாக்கியிருந்தது. இப்போது சக்கரவர்த்தி, ஆயனர் வீட்டைக் காவல் புரியும்படி பல்லவ ராஜ்யத்தின் மகா சமர்த்தனான ஒற்றனை ஏவியது மாமல்லரின் வியப்பைப் பன்மடங்கு அதிகமாக்கியதுடன், அவருடைய மனத்தில் என்னவெல்லாமோ சந்தேகங்களைக் கிளப்புவதற்கு ஏதுவாயிற்று. அதைப் பற்றித் தந்தையைக் கேட்க வேண்டுமென்று அவர் எண்ணினார். ஆனால், மகேந்திரரோ அந்தக் காட்டு வழியில் குதிரையைப் பாய்ச்சலில் விட்டுக் கொண்டு போனார். சக்கரவர்த்தி குதிரையைவிரைவாகச் செலுத்தினால் அவர் ஏதோ முக்கியமான விஷயத்தைப் பற்றிச் சிந்தனை செய்வதற்கு அறிகுறி என்பதை மாமல்லர் அறிந்தவரானபடியால், விஷயத்தைத் தெரிந்து கொள்ள அவருடைய ஆவல் இன்னும் அதிகமாயிற்று. அவருடைய குதிரையும் நாலு கால் பாய்ச்சலில் சென்றது.

காட்டைத் தாண்டியதும் காஞ்சியிலிருந்து மாமல்லபுரத்துக்குப் போகும் இராஜபாட்டை தென்பட்டது. அந்தச் சாலையோரமாக ஒரு பெரிய கால்வாய் ஓடிற்று. அந்தக் கால்வாயில் ஒன்றன்பின் ஒன்றாகப் படகுகள் காஞ்சியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன. படகுகளில் பெரும்பாலும் நெல் மூட்டைகள் ஏற்றியிருந்தன. ஒவ்வொரு படகையும் இரண்டு ஆட்கள் தள்ளிக் கொண்டு வந்தார்கள்.

இருபுறத்திலும் மரமடர்ந்த விசாலமான சாலையும், தெளிந்த நீரையுடைய கால்வாயும், கால்வாயில் மிதந்து வந்த படகுகளும், கால்வாய்க்கு அப்பால் மரங்களின் வழியாக வெகு தூரத்துக்குத் தெரிந்த பசுமையான சமவெளியும் மனோகரமாகக் காட்சியளித்தன. கால்வாய் நீரில் ஆங்காங்கு மரங்களின் கருநிழல் படிந்திருந்த இடங்கள் கண்களைக் குளிரச் செய்தன. சற்றுத் தூரத்திலே சென்ற படகுகளில் ஒன்றிலிருந்து படகோட்டி ஒருவன்,

> செங்கனி வாயில் ஒரு
>     வேய்ங்குழல் கொண்டிசைத்து
> தேனிசைதான் பொழிவோன்
>     யார் யார் யார்? கிளியே!
> செந்தாமரை முகத்தில்
>     மந்தகாசம் புரிந்து
> சிந்தை திரையாய்க் கொள்வோன்
>     யார் யார் யார்? கிளியே!

என்று இனிய குரலில் உணர்ச்சி ததும்பப் பாடிய இன்னிசைக் கீதம் இளங்காற்றிலே மிதந்து வந்தது.

இத்தகைய சாந்தமும் இன்பமும் அமைதியும் அழகும் குடிகொண்ட காட்சியைக் குலைத்துக்கொண்டும், "இது பொய்யான அமைதி; சீக்கிரத்திலே இடியும் மழையும் புயலும் பூகம்பமும் வரப் போகின்றன!" என்று மௌனப் பறையறைந்து தெரிவித்துக் கொண்டும் அக்கால்வாயில் நெல்லேற்றிய படகுகளுக்கு நடுவிலே ஆயுதங்கள் ஏற்றிய படகு ஒன்றும் வந்து கொண்டிருந்தது. அதில் வேல், வாள், ஈட்டி, கத்தி, கேடயம் முதலிய விதவிதமான போர்க் கருவிகள் நிறைந்திருந்தன.

அதுவரையில் மௌனமாக நின்று அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த சக்கரவர்த்தி ஆயுதப் படையைக் கண்டதும், "ஆகா, பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்த ஆயத்தங்கள் பலமாகத்தான் நடக்கின்றன!" என்று பரிகாசமும் மனக்கசப்பும் தொனித்த குரலில் கூறி விட்டு, பக்கத்திலே குதிரை மேலிருந்த தம் குமாரரைப் பார்த்தார். அவருடைய முகத்தோற்றத்தைக் கவனித்ததும், "நரசிம்மா! ஏதோ கேட்க விரும்புகிறாய் போலிருக்கிறதே!" என்றார்.

"எப்படித் தெரிந்தது, அப்பா!" என்றார் குமார சக்கரவர்த்தி.

"உன் முகம் தெரிவிக்கிறது. அபிநயக் கலை முகபாவம் ஆகியவைகளைப் பற்றி இப்போதுதானே பேசி விட்டு வந்தோம்?— கேட்க விரும்பியதைக் கேள்!" என்றார் தந்தை.

"சத்ருக்னனை எங்கே அனுப்பினீர்கள்!"

"ஆயனர் வீட்டுக்கு."

"எதற்காக?"

"ஒற்றனை வேறு எதற்காக அனுப்புவார்கள்? வேவு பார்ப்பதற்குத்தான்!"

"என்ன சொல்கிறீர்கள், அப்பா! ஆயனச் சிற்பியின் வீட்டை வேவு பார்க்கும்படியான அவசியம் என்ன ஏற்பட்டது?"

"யுத்த காலத்தில் சர்வ ஜாக்கிரதையாக யிருக்க வேண்டும். மாமல்லா! இம் மாதிரி சமயங்களில் சந்நியாசியின் காவித் துணிக்குள்ளே எதிரியின் ஒற்றன் ஒளிந்திருக்கலாம். சிற்பக் கலைக்குள்ளே சதியாலோசனை இருக்கலாம்...."

நரசிம்மர் தம்மை மீறிய பதைபதைப்புடன், "ஆகா! இது என்ன? ஆயனச் சிற்பியா நமக்கு எதிராகச் சதி செய்கிறார்? என்னால் நம்ப முடியவில்லையே!" என்றார்.

"ஆயனச் சிற்பி சதி செய்வதாக நான் சொல்லவில்லையே? அந்தப் பரமசாது நமக்காக உயிரையே விடக் கூடியவராயிற்றே!"

மாமல்லர் சிறிது சாந்தம் அடைந்து,




பத்திரிகை ஆசிரியர் (எழுத்தாளரிடம்): சார், நீங்க பழைய கதைகளையே காப்பியடிச்சுக் காப்பியடிச்சு இப்படிக் கதைகளைக் கொண்டு வர்றதைவிட, பேசாம, 'சிறுகதைகளைக் காப்பியடிச்சுக் கதை எழுதுவது எப்படி'ங்கற தலைப்பிலே ஒரு கட்டுரை எழுதலாமே?"

— ஜெயாப்பிரியன்.

"அப்படியானால் ஆயனர் வீட்டுக்கு ஒற்றனுடைய காவல் எதற்காக?" என்று கேட்டார்.

"கள்ளங்கபடமற்ற அந்தச் சாது சிற்பிக்குத் தெரியாமல் அவர் வீட்டில் பகைவர்களின் ஒற்றர்கள் இருக்கலாம் அல்லவா?"

"ஆயனர் வீட்டில் ஒற்றர்களா? தங்களுக்கு எப்படித் தெரிந்தது? நான் ஒருவரையும் பார்க்கவில்லையே?"

"மாமல்லா! இராஜ்ய நிர்வாகத்தில் ஈடுபட்டவர்களுக்கு எப்போதும் கண்ணும் காதும் திறந்திருக்க வேண்டும். யுத்த காலத்தில் இது மிகவும் அவசியம். ஆயனர் வீட்டில் நாம் இருந்த போது உன் கண்கள், என்ன செய்து கொண்டிருந்தன?" என்று கேட்ட வண்ணம் சக்கரவர்த்தி நரசிம்மரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

அங்கே தம் கண்கள் சிவகாமியின் கண்களுடன் அந்தரங்கம் பேசுவதிலேயே பெரிதும் ஈடுபட்டிருந்தன என்பது ஞாபகம் வரவே நரசிம்மருடைய பால் வடியும் இளம் வதனம் வெட்கத்தினால் சிவந்தது. அதே சமயத்தில் முன்னை விட அதிக தூரத்திலிருந்து படகோட்டியின் இனிய கீதம் மெல்லிய குரலில் பின்வருமாறு கேட்டது:

கண்ணன் என்றங்கேயொரு
கள்வன் உளன் என்று
கன்னியர் சொன்னதெல்லாம்
மெய்தானோ? கிளியே!
வெண்ணெய் திருடும் பிள்ளை
என்னுள்ளம் கவர்ந்ததென்ன?
கண்ணால் மொழிந்ததென்ன?
சொல்வாய்! பைங்கிளியே!

(தொடரும்)



# புரியாத புதிர்

ஜெயிலிலிருந்து தப்பி ஓடி வரும் ரகு. போலீஸுக்குப் பயந்து ஏதோ ஒரு வீட்டுக்குள் நுழைகிறான். அந்த வீட்டில் அவனுடைய கல்லூரித்தோழி ரேகா! முதலில் தன் கணவன் ரகுவரன் ஆபீஸ் டூர் போயிருப்பதாகப் பொய் சொல்லி, பின்பு தன் கணவனைத் தானே கொன்று விட்டதாகக் கூறுகிறாள். (காரணம்: கணவன் ரகுவரனின் தாங்க முடியாத சித்திரவதைகள்.) ரகுவும் தன் பங்குக்குத் தான் ஜெயிலுக்குப் போனதற்கு ஒரு கொலை கேஸ்தான் காரணம் என்று கூறுகிறான். (காரணம்: காதலியைக் கெடுத்தவனைக் கொன்றது.) இருவருமாக ரேகாவின் கணவன் பிரேதத்தைக் காரில் கொண்டு போய் ஒரு பழைய கிணற்றில் போட்டு விட்டுக் கதையை முடித்து விடுகிறார்கள்.

ஆனால் கதைதான் முடிய மாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறது. ரேகாவின் கணவன் டூர் போக டிக்கெட் வாங்கிய விமானம் விபத்துக்குள்ளாக, அதில் அவனும் இறந்து போய் விட்டதாகச் செய்தி வருகிறது! 'அப்பாடா' என்று ரேகா நிம்மதியாகிறாள்! அப்போது திடீரென்று ஒரு டெலிபோன். "உன் கணவனைக் கொன்று விட்டு மறைத்து விட்டாயே.. எனக்கு மூன்று லட்ச ரூபாய் பணம் தராவிட்டால்..." அடிக்கடி வருகிற இந்த டெலிபோன் மிரட்டலை புரியாடித்து, மிரட்டுவது யார்? என்று கண்டுபிடிக்க ரகு, ரேகாவுடனேயே தங்குகிறான்...

ரகுவரனும் ரேகாவும் நன்றாகவே நடித்திருக்கிறார்கள். ரேகாவைக் கொடுமைப்படுத்துகிற காட்சிகளில் எல்லாமே ரகுவரனைக் கம்பை எடுத்துச் சாத்த வேண்டும் போல் வருகிறது.

பின்னணி இசை த்ரிலிங்கிற்குப் பொருத்தமாய் அடித்திருப்பினும் பாடல்கள் ஒன்றும் சொல்லும்படி இல்லை.

டைரக்டர் கே. எஸ். ரவிக்குமாருக்கு இது முதல் படமாமே! ஒரு 'பாக்கெட்' நாவல் ரகக் கதையைப் படமாக்கியிருந்தாலும் அங்கங்கே டைரக்டரின் உழைப்புத் தெரிகிறது. தட்டிக் கொடுக்கலாம்!

சரி, மார்க் போடட்டுமா?

| | |
|---|---|
| **கதை — திரைக்கதை** | **— 37** |
| **டைரக்ஷன்** | **— 45** |
| **ஒளிப்பதிவு** | **— 36** |
| **பாடல்கள், இசை** | **— 32** |
| **நடிப்பு (ரகுவரன் + ரேகா)** | **— 48** |

கடைசியாக ஒரு விஷயம். மார்க் போடுவதிலே எனக்குக் கஞ்சத்தனம் பிடிக்காது. கொஞ்சம் தாராளமாப் போட்டுத்தான் பழக்கம்.

* பி. என். கண்ணன்

தொகுப்பு: **பாரதிபாலன்**



**இந்தப் படத்தைச் சென்னை, கீழ்ப்பாக்கம் மாநகராட்சி நடுநிலைப் பள்ளி ஆசிரியர் பி. என். கண்ணன் விமர்சிக்கிறார்...**

# கூட்டுக் குருவிகள்

இந்த வீட்டுக்குக் குடிவந்து இன்றோடு ஒரு வருடமாகிறது. நான்கு லட்சத்திற்கு வாங்கி, மேலும் இருபதாயிரம் செலவழித்து மெருகேற்றிய வீடு! நிறையக் கனவுகளுடன் பத்து வருடங்களாகச் சேர்த்த பணம்; தந்தையின் கிராமத்து ஓட்டு வீடு விற்ற பணம்; மனைவியின் வங்கிக் கடன்... எல்லாவற்றையும் திரட்டிப் போட்டு வாங்கிய வீடு.

மொத்தப் பணத்தைச் சேர்ப்பதற்குள் ரவியின் முழி பிதுங்கி விட்டது. தனி வீடு கட்டும் காலம் மாறி ஃப்ளாட் ஸிஸ்டம் வந்துவிட்ட இந்நாளில் ஃப்ளாட் வாங்குவது வீட்டைக் கட்டிப் பார்ப்பதைவிடச் சுலபம் தான்... ஆனாலும்...

வாங்கும் போது இருந்த ஆரம்ப ஸோடா பாட்டில் உற்சாகம் இரண்டே மாதங்களில் வடிந்துவிட்டது. வாடகை வீடானாலும் விருகம்பாக்கத்து வீடு பெரியது. அதில் ஆறு வருடங்கள் குடியிருந்து சேர்த்த ஃபர்னிச்சர்... மற்ற பொருட்களை இந்தப் புதுமையான அடையாறு ஃப்ளாட்டில் அழகாக அடுக்க முடியவில்லை, அடைக்கத்தான் முடிந்தது!

ரவியும் அவன் மனைவியும் சேர்த்திருந்த மாடர்ன் ஃபர்னிச்சர் நடுவில் மியூஸியம் பீஸ் மாதிரி அப்பாவின் பழங்காலத்து செஸ்ட் ஆஃப் ட்ராயர்ஸ்... பெல்ஜியம் மிர்ரர் பதித்த மர பீரோ... நண்பர்கள் வந்து பாராட்டிய போது தெரிந்த அவற்றின் ''அந்தக் காலத்து'' உறுதியும், பர்மீய மக் பளபளப்பும், மற்ற நேரங்களில் அவை இடத்தை அடைத்துக் கொண்டு பூதங்களாகப் பயமுறுத்திய போது தெரியவில்லை.

ரவியின் மனைவி கெட்டிக்காரி. அம்மாவின் பழைய 'ரயில் அடுக்கை'த் தேய்த்து, நடுவில் 'மாஸ்' நட்டு 'மணி ப்ளான்ட்' படர விட்டு ஹாலில் கவர்ச்சியாக வைத்து விட்டாள். கல்லுக்குண்டாகக் கனக்கும் அம்மாவின் கேரள வெண்கல விளக்கு, சாமி அறையில் சுடருடன் பிரகாசிக்காமல் 'ப்ராஸ்ஸோ' மினுமினுப்புடன் ஹாலில் குடியிருந்தது.

இதெல்லாம் சரி. வேண்டாத கண்டா முண்டான்களை என்ன செய்வது? எதை வைத்துக் கொள்வது, எதை கழித்துக் கட்டுவது? யாருக்குமே தன் பொருட்கள் அதிகப்படி என்று தோன்றாதது இயற்கைதானே? வாழையடி வாழையாக வந்த பித்தளைப் பாத்திரங்கள், அம்மா அதில் தன் பாரம்பரியத்தைப் பார்த்தாள். வருடக்கணக்காகச் சேர்த்த புத்தகங்கள் அப்பாவின் உயிர் மூச்சு. பெரிய மர ஈஸிசேரும் அப்பாவுடையது. காலை நீட்டிப் படுத்துச் சுகமாகத் தூங்கலாம். ஆனால் அந்த சேர் இருபது சதுர அடி... அதாவது பத்தாயிர ரூபாய் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது! மீனாவின் மிக்ஸர், க்ரைண்டர் பக்கத்தில் அம்மாவின் கல்லுரல், இயந்திரம்.... இரும்பு உரல்.

எண்ணூறு சதுர அடிக்குள் ஆறு பேர்களின் ஆசாபாசங்களை அடைக்க முடியுமா?

இந்த இடப் பிரச்னையால் தோன்றிய வாக்குவாதங்கள்... சிறு பொறிகளாகக் கிளம்பி, மாறி மாறி ஊதிப் பெரிதாக்கப் பட்டு, பேச்சு வார்த்தை முறியும் நிலைக்குப் போவதுண்டு.

கிராமத்தில் விசாலமாகக் காலை நீட்டி நடந்த அப்பாவுக்கு இங்கு திரும்பிய இடமெல்லாம் இடித்தது. "ஒரு நாள் எதிலாவது மோதிக் கொண்டு சாகப் போகிறேன்'' என்று கத்துவார்.

கிராமத்து வாசல் திண்ணையில்லை; விருகம்பாக்கத்துத் தனி வீடு போலக் கதவைத் திறந்து வைக்க முடியாது. மூடிய கதவுக்குப் பின்னால்தான் உலகம் என்பதைப் பாட்டியால் ஜீரணிக்க முடியவில்லை. ''இதென்ன அடைச்சாமாதிரி வீடு'' என்று புலம்புவாள்.

வாசல் அறையில் இறையும் வாரப் பத்திரிகைகளைப் பார்த்து... ''ஏன்! படிச்சா மேகஸினை ஒழுங்கா அடுக்கி வைக்கிறது...'' என்று ரவி அலற.

''ஏன்! நீ கூடத்தான் நியூஸ் பேப்பரைக் கோணாமாணான்னு தூக்கிப் போடறே....'' என்று பதிலுக்கு அப்பா கத்த...

இதன் தொடராக நாலு நாட்கள் அப்பா பத்திரிகைகளைக் கையால் தொடமாட்டார். ஐந்தாவது நாள் அவை ஸோபாவில் அலட்சியமாகத் தூக்கி எறியப்பட்ட நிலையில் காட்சி அளிக்கும்.

மிகவும் சூடான விவாதங்களின்,

முடிவில் ரவிக்கு வீட்டிலுள்ள பழைய உபயோகமில்லாத பொருட்கள் மீது தாங்க முடியாத கோபம் வெளிப்படும். வீடு ஒரே குப்பை, அடைசல் என்று தோன்றும். சம்பந்தமேயில்லாமல் கத்துவான். பதிலுக்கு மற்றவர்கள் கத்துவார்கள்.

''எங்களுக்குப் பின்னாடி நீ இதையெல்லாம் வெட்டி விறகா எரிச்சால் கூட, நாங்க என்ன சொல்லப் போறோம்...'' என்று அம்மாவின் ஆதங்கம் அழுகையில் முடியும்.

சரி, இதைவிடப் பெரிய வீடு பார்க்கலாமா? கொஞ்சம் தள்ளி இருந்தாலும் பரவாயில்லை... என்றால், பட்ஜெட் உதைத்தது! ஃப்ளாட்டை விற்றால், வாங்கிய பாங்க் கடனைத் திருப்பித் தர வேண்டும். மறுபடி கடன் வாங்க முடியாது. பணம் குறையும்.

இடம் போதவில்லையே தவிர இந்த




பானுகுமார்

வீடு லொகேஷன் ரொம்ப சௌகரியம். கறிகாய் மார்க்கெட், கடைகள், பஸ் ஸ்டாண்ட் எல்லாம் கிட்ட இருந்தன. வீடு மாற்றினால் மறுபடி பெண் ஸ்கூல் அட்மிஷனுக்கு அலைய வேண்டும். வீண் தொல்லை. இதையெல்லாம் நினைத்தால் எதற்காக வீடு மாற்ற வேண்டும். ஒவ்வொருத்தர் ஒண்டுக் குடித்தனத்தில் ஒன்பது பேர் இல்லையா? எனத் தோன்றும்.

இருக்கிறார்கள்! ரவி கூட வேலை பார்க்கும் சுந்தர்ராமன் இல்லையா? பாவம். அவன் ஒருத்தன் சம்பளத்தில் எட்டு பேர் சாப்பிட வேண்டும். அப்பா ரிடையர்ட் ப்ரைவேட் கம்பெனி குமாஸ்தா. பென்ஷன் கிடையாது. அம்மா, காலேஜ் படிக்கும் இரண்டு தங்கைகள், ஸ்கூல் ஃபைனலில் ஒரு தம்பி, வேலைக்குப் போகாத மனைவி, ஒரு பையன்... மாசச் செலவே இழுபறி என்ற நிலையில் வீடு எங்கே வாங்குவது.

மயிலாப்பூரில் பெட்டி மாதிரி இரண்டு சிறிய அறைகள் கொண்ட வாடகை வீடு. அதில் ஒன்று வராந்தாவை மூடிய சிறிய அறை. பேருக்கு ஒரு சமையலறை. இதில் இவ்வளவு பேர்.

"எப்படிடா சமாளிக்கிறீங்க?"

"என் பாடு தேவலைப்பா. பம்பாய் மாதிரி ஊரிலே, இதிலே பாதி எடத்தில் பத்து பேர் இருப்பாங்களாமே. ஒரே அறையில் பரண் கட்டிப் படுத்துக் குடும்பம் நடத்தும் தம்பதிகள் உண்டாமே..."

"இருந்தாலும்... உனக்குக் கஷ்டமாயில்லே...."

"கஷ்டம்தான். அதுக்காக என்ன செய்ய முடியும்? அதையே நினைத்துக் கொண்டு இன்றைக்கு இருக்கிற வாழ்க்கையை வீணடிச்சுக்கறதிலே என்ன லாபம்? அப்பாவோட சம்பளத்தில் நாங்களெல்லாம் படிக்கிறச்சே.. திருவல்லிக்கேணி ஸ்டோர்ஸ் மாதிரி வீடு. பொது பாத்ரூம் டாய்லெட்... அதுவும் வெளியிலே கொஞ்சம் தள்ளி! இப்ப சின்னதா இருந்தாலும் ரூம்னு இருக்கே. பாத்ரூம் உள்ளேயே இருக்கு... இது முன்னேற்றம்தானே? சின்ன இடத்திலே சேர்ந்து இருப்பது எங்களுக்குப் பழகிவிட்டது. எங்க கிச்சன் சின்னது... அழகா எதையும் அடுக்க முடியாது. ஒண்ணுக்குள்ளே ஒண்ணு போட்டுச் சமாளிக்கிறாள் அம்மா. அதற்காகச் சாப்பிடாமலா இருக்கோம். கப்போர்ட் மேல சூட்கேஸ், அதுமேல படுக்கை என்று கோபுரம் போலத் தூக்கி வைப்பதும், தேவைப்படும் போது இறக்குவதும்... தனி த்ரில்டா! ஒரே இடத்தில் உட்கார்ந்து படிக்கணும், வாய்விட்டுப் படிக்க முடியாது. ஆனால் என் தம்பி தங்கைகள் நல்ல மார்க் வாங்கறாங்க. ஏதோ இன்னி பொழுதுக்கு ஒதுங்க இடமிருக்கே. முடிஞ்சவரை வீட்டை ஒழுங்கா வைச்சுக்க முயற்சி பண்றேன். அதையும்மீறி, வீடு நேர்த்தியா இல்லைன்னா, நான் கண்டுக்கறதில்லே. என்ன, சின்ன வீட்டில் என்னுடன் ஏழுபேர் இருக்கத்தான் போகிறார்கள். அவர்களுடன் ஒத்து வாழ்ந்தால்தான் எனக்கு நிம்மதி. ஃபர்னிச்சர் இடிக்கிறதா, தடவிக் கொண்டு மேலே நடக்க வேண்டும். பையனின் மூணு சக்கர சைக்கிள் வழியில் நிற்கும். ஆபீஸ் போகும் வேகத்தில் இடறி விழாமல் சமாளிக்க வேண்டும். இதுதான் நிதர்சனம். இதை ஒப்புக் கொள்ள வேண்டும். எப்படி மனிதர்களைக் குணம் குறைகளுடன் ஒப்புக் கொள்கிறோமோ... அது போல...... அவர்கள் உடைமைகளுடன் ஒப்புக் கொள்ள வேண்டும். நான் அப்படித்தான் வாழ்கிறேன்."

சுந்தர் பேச்சைக் கேட்டதில் ஒன்று புரிந்தது. வீடு எப்போதும் பிரச்னையில்லை. அதிலுள்ள மனிதர்கள்தான் பிரச்னை. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தால், பத்தடி அறையைப் பங்களாவாக நினைக்க முடியும். இந்த விட்டுக்கொடுத்தலைத் தான் முதலில் ஆரம்பிக்க வேண்டும் என்று முடிவு செய்தான் ரவி.

# சிகரங்களை நோக்கி



## கவியரசு வைரமுத்து

எழுதும் புதிய கதைத் தொடர்

# கல்கி

21-10-90

# யூ ரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.

வரும் நாட்கள் ஏதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும்—இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.




செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்வம் கிளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.

**யூரோக்ளீன்**: உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும்.

**அக்வாகார்ட்**: ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.

உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.

# சத்திய சோதனை

லதா

செவந்தி ப்ளஸ் டூவில் பாஸாகி விட்டாள்!

அவள் அப்பா மாயாண்டியுடன் மார்க் ஷீட் மற்றும் டி.சி. வாங்கப் பள்ளிக்குச் சென்றபோது, மாயாண்டியைக் கண்ட தலைமை ஆசிரியர் ''என்ன மாயாண்டி! சௌக்கியமா? செவந்தி தொள்ளாயிரத்து அறுபது மார்க் வாங்கியிருக்கு! நம்ம ஸ்கூலுலே அதுதான் ஃபர்ஸ்ட். அடுத்தாப்பல செவந்தியை என்ன செய்யப் போறே? அவ மேலே படிக்க வேணாமா?'' — முகத்தில் கேள்விக் குறியுடன் கேட்டார்.

''ஐயா! ஏதோ இந்தக் கிராமத்திலே என்னாலே முடிஞ்ச அளவு படிக்க வைச்சுட்டேன். இனிமேல் வெளியூருக்கு அனுப்பிப் படிக்க வைக்கிற அளவுக்கு என்னாலே முடியாதுங்க.'' — தம் இயலாமையைத் தெளிவு படுத்தினார் மாயாண்டி.

''அப்படின்னா ஒண்ணு செய்யேன். இந்த ஸ்கூலுலே டீச்சர் டிரெயினிங்குக்குச் சேர்த்து விடேன். இந்த மார்க்குக்கு நிச்சயம் இடம் கிடைக்கும். ஆனால்....''

சொல்ல வந்ததை நிறுத்தியவுடன், ''ஐயா! ஏதோ சொல்ல வந்ததை நிறுத்திட்டீங்களே. சொல்லுங்க ஐயா!'' — என்று திவ்யமான பணிவுடன் கேட்டார் மாயாண்டி.

''வேறு ஒண்ணுமில்லே மாயாண்டி! டீச்சர் டிரெயினிங்கிலே சேர்க்கணும்னா ஸ்கூலுக்கு மூவாயிரம் ரூபாய் நன்கொடையாக் கொடுக்கணும். உன்னாலே முடியுமான்னுதான் யோசிக்கிறேன்.''

சிறிது நேரம் மௌனம் நிலவியது. மாயாண்டிதான் தொடர்ந்தார்.

''என்னங்க ஐயா! நான் மூவாயிரத்துக்கு எங்கே போறது! என்கிட்டே ரெண்டு உழவு மாடுகள்தான் இருக்கு. அதை வைச்சுத்தான் வேலைக்குப் போறேன். ஏதோ அன்றாடம் வேலை கிடைச்சாத்தான் நாங்க மூணு ஜீவனுக வயிற்றைக் கழுவ முடியும். அதுவும் அரை வயிற்றைத்தான். அப்படி இருக்கையிலே இவ்வளவு பணத்தை நெனச்சுக் கூடப் பார்க்க முடியுமா? போதுங்க ஐயா என் மகளுக்குப் படிப்பு! ஏதோ கைநாட்டுக்குப் பதிலா கையெழுத்து போடத் தெரிஞ்சாப் போதும்!''

''மாயாண்டி! ஏதோ உம்பொண்ணுக்கு சரஸ்வதி கடாட்சம் ரொம்பவே இருக்கு. அதனாலே சொல்றேன். எத்தனை நாளைக்குத்தான் நீயும் மாடா உழைக்க முடியும்? வயதான பிறகு உன் குடும்பத்தைக் காப்பாத்தறது யாரு? செவந்தியும் ஒரே பொண்ணு. அதுவும் ஒரு நல்ல நிலையிலே இருக்க வேணாமா?''

தலைமை ஆசிரியரின் ஊக்க மொழிகள் மாயாண்டியின் மனத்தில் ஒரு கங்கணத்தைக் கட்டின — எப்படியாவது செவந்தியைத் தொடர்ந்து படிக்க வைக்க வேண்டுமென்று.

பண்ணையாரைக் கண்டவுடன் மாயாண்டியின் இரு கரங்களும் தாமாகவே குவிந்தன.

''என்ன மாயாண்டி?'' —பண்ணையாரின், குரலிலே மிரட்டல் தொனி இருந்தது.

''எசமான்! எம்பொண்ணு பன்னிரண்டாம் வகுப்பிலே பாஸ் பண்ணியிருக்கா.''

''அதனாலென்ன?''

''தொடர்ந்து படிக்கப் போடலாம்னு இருக்கேன். அதனாலே கொஞ்சம் பணம் கொடுத்து உதவி பண்ணினாத் தேவலே...'' — கூனிக் குறுகி உடம்பை வளைத்து, இறைஞ்சிக் கேட்டார் மாயாண்டி.

பண்ணையாருக்கு நுனிமூக்கில் கோபம் வந்தது.

''என்ன மாயாண்டி! உனக்கு என்ன பைத்தியம் பிடிச்சிருக்கா?! இந்தப் படிப்பு எல்லாம் உங்குடும்பத்துக்கு ஒத்து வருமா? நீயோ அன்றாடங்காய்ச்சி. அப்படி இருக்கையிலே உம்பொண்ணைப் படிக்க வைக்கப் போறயாக்கும்! நடக்கக் கூடியதைப் பாரப்பா....''

—பண்ணையார் கடிந்ததையும் மாயாண்டி

போட்டிக் கதை — 4



பொருட்படுத்தவில்லை.

''என்னமோ எசமான்! அந்த தலைமை ஆசிரியர் தான் சொன்னாரு. உம்பொண்ணு நல்ல மார்க்கு வாங்கியிருக்கு. டீச்சர் டிரெயினிங்குக்கு நிச்சயம் இடம் கிடைக்கும். டிரெயினிங் முடிஞ்சவுடனே டீச்சர் உத்தியோகமும் கொடுச்சிடுமாம். ஏதோ செவந்திக்கு உத்தியோகம் கிடைச்சா எங்க குடும்பத் தரித்திரம் ஒழியுமில்லே. அதனாலே மனசு வைச்சு மூவாயிரம் ரூபாய்க் கடனாக் கொடுங்க, எசமான்!''

பண்ணையாரின் முகம் ஜிவ்வென்று சிவப்பாகியது.

''உனக்கு எவ்வளவு சொன்னாலும் புரியாது போலிருக்கு! மூவாயிரம் ரூபாய் சாதாரணமா? மார்க்காம் மார்க்கு! நாக்கு வழிக்கவா? எம் பொண்ணும் குறைச்சலாத் தான் மார்க் வாங்கியிருக்கு. அதே ஸ்கூல்ல ஐயாயிரத்தை வெட்டினேன். உடனே இடம் கிடைச்சிடுச்சு. எவனோ சொன்னான்னு நெசா புரியாமல் பேசுறியே.''

மாயாண்டி விட்ட பாடில்லை.

''எசமான்! ஏதோ தயவு பண்ணிக் கொடுங்க. நல்லா படிக்கிற பொண்ணு. படிக்க வைப்போம். அதுக்குப் பிறகு கடவுள் விட்ட வழி. செவந்தி உத்தியோகத்திற்குப் போனவுடனே கடனை அடைச்சிடுறேன். அது வரைக்கும் இந்தப் பணத்திற்கு வட்டிக்குப் பதிலா நானே ,சாயங்காலம் வந்து உங்க பண்ணையிலே எடுபிடி வேலை செய்யறேன். நம்பிக்கை இல்லாட்டி வெத்துப் பேப்பரிலே கைநாட்டு வைச்சுத் தர்றேன்.''

பண்ணையாரின் மூளை சுறுசுறுப்பாகியது. தானே வலிய வந்து வலைக்குள் மாட்டியவனைப் பயன்படுத்திக் கொள்ள எத்தனித்தார்.

''ஏன்யா! கைநாட்டு வைச்சுக் கொடுத்த வெத்துப் பேப்பர் எதுக்கு! ஏதாச்சும் நிலப் பத்திரம் இருந்தா பரவாயில்லே. ஓட்டாண்டியான உங்கிட்டே எங்கே இருக்கப் போவுது? ஏதோ ஒரு ஜோடி மாடு வைச்சிருக்கே. அந்த மாடுகளுக்கு ஈடா ரெண்டாயிரம் ரூபாய் தர்றேன். ரெண்டு வருசத்துக்குள்ளே கடனைத் தீக்காட்டி மாட்டை வாங்கிடுவேன். சம்மதம்னா பணத்தை எடுத்தாறேன்...''

மாயாண்டியின் மனத்தில் 'இரண்டாயிரம் போதுமா?' என்ற சந்தேகம் தோன்





"ஆனாலும் மாப்பிள்ளைப் பையன் மொய்ப்பணத்துக்குஇப்படிஆசைப்படக் கூடாது!"

"எப்படிச் சொல்றீங்க?"

"இருபத்தஞ்சு ரூபாய்க்கு மேலே மொய் கொடுத்தால் இரண்டு கப் பாயசம் கூடுதலாத் தருவோம்'னு கல்யாணப்பந்தல்லே எழுதிப் போட்டிருக்காங்களே!"

ரியது. ஆனால் தலைமை ஆசிரியரிடம் 'கெஞ்சிச் சரிக் கட்டிவிடலாம் என்ற நம்பிக்கையுடன் கிடைத்ததை விடாமல் வாங்கிக் கொண்டு கிளம்பினார்.

அப்பொழுதுதான் பள்ளியிலிருந்து வந்த தலைமை ஆசிரியர் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார்.

வீட்டுக்குள் நுழைந்து அவர் முன் நின்ற மாயாண்டி, "ஐயா! நானும் எவ்வளவோ முயற்சி பண்ணித்தான் பார்த்தேன். ரெண்டாயிரம் ரூபாய்தான் புரட்ட முடிஞ்சது. எப்படியோ பெரிய மனசு பண்ணி எம் மகளைச் சேர்த்துக்கிட்டா உங்களுக்குக் கோடி புண்ணியம்!" — இதமாகக் கூறினார்.

"மாயாண்டி! இது சர்க்கார் ஸ்கூலு. பெற்றோர் ஆசிரியர் கழகம் ஏற்கெனவே முடிவு பண்ணியிருக்கு. எவ்வளவு மார்க் வாங்கியிருந்தாலும், மூவாயிரத்துக்குக் குறைச்சலா நன்கொடை கொடுத்தா இடம் கொடுக்கக் கூடாதாம். அப்படி இருக்கையிலே நான் என்ன செய்ய முடியும். கொஞ்சம் நீயே யோசனை பண்ணிப் பாரு."

மாயாண்டி சலிப்புடன், "அப்ப எம் பொண்ணு படிக்காட்டிப் போகுதுங்க. அவ பேனாவுக்குப் பதிலா அரிவாளைத்தான் பிடிக்கணும்னு தலைவிதி இருந்தால் அதை யாராலும் மாத்த முடியுமா? பண்ணையாரு சொன்னது போல எங்களை மாதிரி ஏழைகளுக்கு எதுக்குங்க ஐயா படிப்பு! இந்த ரெண்டாயிரமும் அவரு கிட்டேத்தான் கடனா வாங்கினேன். இந்தப் பணத்தை அவரு கிட்டே திருப்பிக் கொடுத்திடுறேன். எம் பொண்ணு ரிகார்ட் ஷீட்டைக் கொடுங்க என்றார்.

"மனம் ஒடிஞ்சிடாதே மாயாண்டி! அவரு கிட்டே எப்படியாச்சும் மன்றாடி ஆயிரம் ரூபாய் வாங்கிச் சேர்த்து விடு. மத்ததை வேணும்னா நாங்க பார்த்துக்கிறோம். படிச்சு முடிச்சு, உத்தியோகம் கிடைச்சவுடனே சம்பளமே மாசத்துக்கு ரெண்டாயிரம் ரூபா...."

மாதச் சம்பளம் இரண்டாயிரம்! — மனத்தில் தேனூற்று பொங்கியது. எப்படியாவது பண்ணையாரின் காலில் விழுந்தாவது ஆயிரம் வாங்கி விட வேண்டும் என்று சாதுரியத்துடன் குடிசைக்குத் திரும்பினார்.

மறுநாள்! பண்ணையாரிடம் மேலும் ஆயிரம் ரூபாய் கொடுத்து உதவும்படி மிகவும் பணிவுடன் வேண்டினார் மாயாண்டி.

"பண்ணையாருக்கு நிலை கொள்ளவில்லை. "மாயாண்டி! நீ வைச்சிருக்கிற ஒரு ஜோடி மாடு ரெண்டாயிரம் ரூபாய்க்கு மேலே விலை போகாது. இன்னும் ஆயிரம் ரூபா கொடுக்கணும்னா நான் ஒண்ணும் இளிச்சவாயன் இல்லே. இப்ப சேர்கிறதுக்கே மூவாயிரம். அடுத்து புஸ்தகம் வாங்கணும். நோட்டு வாங்கணும். பேனா வாங்கணும். பென்சில் வாங்கணும். இதுக்கெல்லாம் எங்கே போவே? உம் பொண்ணை நீ ஸ்கூலுக்கு அனுப்பணும்னா விக்காததை வித்துத்தான் நீ அனுப்ப முடியும்.... எனக்கு ஒண்ணும் ஆட்சேபணையில்லே..." பொரிந்து தள்ளி விட்டார்.

கவலையுடன் வீடு திரும்பிய கணவரின் முகவாட்டத்தைக் கண்ட மனைவி பொன்னாத்தாள், "என்னங்க ஒரு மாதிரியா இருக்கீங்க. பண்ணையார் முடியாதுன்னு சொல்லிட்டாரா!" — சந்தேகத்துடன் கேட்டாள்.

"என்ன பொன்னாத்தா! நம்ம பொண்ணு இவ்வளவு கஷ்டத்திலேயும் படிச்சுத்தான் ஆகணுமா? இன்னும் ஆயிரம் ரூபா வேணும்னு பண்ணையாரைக் கேட்டேன். அவரு இல்லேன்னு சொன்னாலும் பரவாயில்லே. அழிச்சாட்டியம் பண்ணிப் பேசிட்டாரு.... விக்காததை வித்துத்தான் படிக்க வைக்கணும்னு சொல்றாரு பொன்னாத்தா. இதைக் கேட்டவுடன் எம்மனசே...."

விண்டு ஒடிந்து விம்மலாக வந்த சொற்களைக் கேட்ட பொன்னாத்தாளின் கன்னத்தில் நீர்க் கோடுகள் வரிவிட்டு வழிந்தன.

மனத்தைத் தேற்றிக் கொண்டு, "என்னங்க! நான் சொல்றேன்னு தப்பா எடுத்துக்கிறாதீங்க. என் தாலியை வித்தா ஆயிரம் ரூபாய் தேறும். அந்த ரெண்டாயிரத்தோட இதையும் சேர்த்து நம்ம பொண்ணை எப்படியாச்சும் டிரெயினிங் ஸ்கூலுல சேர்த்து விட்டுடுங்க...." என்று தைரியமாகச் சொன்னாள்.

மனைவி கூறியதைக் கேட்டவுடன் மாயாண்டிக்குப் பகீரென்றது.

"என்ன பொன்னாத்தா! என்ன காரியம் செய்யச் சொல்றே...!"

"ஏங்க! ஏதோ நம்ம ஒரே பொண்ணு கடவுள் புண்ணியத்திலே நல்லா படிக்கிறா. அப்படிப்பட்டவளுக்கு ஏதாச்சும் உத்தியோகம் கிடைக்காமலா போயிடும். தாலி என்னங்க தாலி! தங்கத்திலே செஞ்சு போட்டாத்தானா தாலி! ஒரு மஞ்சளைக் கயித்திலே கட்டி, கழுத்திலே போட்டாலும் தாலிதாங்க..." — கண்களில் கண்ணீர் பொங்கக் கூறினாள் பொன்னாத்தாள்.

**தா**லி விற்கப்பட்டது! மூவாயிரம் ரூபாய் டொனேசனாகக் கொடுத்து டீச்சர் டிரெயினிங்குக்குச் சேர்க்கப்பட்டாள் செவந்தி.

செவந்தியும் தன் குடும்பச் சூழ்நிலையை எண்ணிக் கடினமாகப் படித்துத் தேர்ச்சி பெற்றாள். சிம்னி விளக்கொளியில் படித்தே ஆயிரத்து இருநூறு மார்க்குக்கு ஆயிரத்து ஐம்பது பெற்றுவிட்டாள்.

தேர்வு முடிவுகள் வந்தவுடன் எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சில் பதிவு செய்தனர்.

சென்ற வருடம் படித்தவர்களுக்கு எல்லாம் இந்த வருடம் டீச்சர் உத்தியோகம் கிடைத்துவிட்டதாம். இந்த வருடம் படித்தவர்களுக்கு அடுத்த வருடத்துக்குள் கிடைத்துவிடுமாம்! — இந்த மகிழ்ச்சியான தகவல் வேறு கிடைத்தது.

எதிர்பார்த்தபடியே ஒரு வருடம் கழித்து இண்டர்வியூவுக்கு அழைப்பும் வந்தது. அதுவும் அரசுப் பள்ளியில் டீச்சர் உத்தியோகத்துக்கு ரெக்ரூட்மெண்ட் போர்டிலே இருந்து வந்தது.

மாயாண்டிக்கு ஏக சந்தோஷம். தன் மகளுக்கு இண்டர்வியூ கார்டு வந்திருக்கிறது. அவள் வாங்கிய மார்க்குக்கு நிச்சயம் உத்தியோகம் கிடைத்துவிடும். கடனையும் சீக்கிரமாக அடைத்து விடலாம். அப்படியே தன் மனைவிக்கு ஐந்து பவுனில் தாலி செய்து போட்டு விடலாம். ஏதோ தனக்கு உள்ள சுமையைக் கூட குறைத்துக் கொள்ளலாம் என்று எண்ணத் தோன்றியது.

ஊர் ஜனங்கள் வேறு கசகசவென்று பேச ஆரம்பித்து விட்டார்கள்.

'பரவாயில்லே. வாயைக்கட்டி, வயித்தைக் கட்டி மாயாண்டி படிக்க வைத்தான். எப்படியோ உத்தியோகம் கிடைக்கப் போகிறது. பண்ணையாரு தன் பொண்ணை எப்படியெல்லாம் படிக்க வைச்சாரு. தினம் கூட்டு வண்டியிலே அவரு பொண்ணு போயிட்டு வருவா. மதியத்துக்குச் சாப்பாடு வண்டியிலே போகும். என்ன பதவிசா அந்தப் பொண்ணைப் படிக்க வைச்சாரு. கடைசி



# இல்லமெல்லாம் ஒளி வீசிடும்
# தூய பட்டுச் சேலைகள்

- ★ பருத்தி, பாலியஸ்டர், பட்டுச் சேலைகள்.
- ★ பருத்தி, பாலியஸ்டர் சர்ட்டிங்ஸ், பட்டுத் துணிகள்.
- ★ பருத்தி, பாலியஸ்டர் சூட்டிங்ஸ்.
- ★ லுங்கிகள், துவாலைகள், வேட்டிகள்.
- ★ படுக்கை விரிப்புகள், அலங்காரத் துணி வகைகள்.

தள்ளுபடி

**20%-40%**



கோ-ஆப்டெக்ஸ்

தமிழ்நாடு கைத்தறி

- ★ உங்கள் அலுவலக மூலமாக கடன் வசதியைப் பெறுங்கள்.
- ★ அருகாமையில் உள்ள கோ-ஆப்டெக்ஸ் விற்பனை நிலையத்திற்கு வருகை தாரீர் !
- ★ ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களிலும் விற்பனை உண்டு.

DIPR/2020/MS/90/ELEGANT

யிலே குறைச்சலா மார்க்கு வாங்கித்தான் பாஸ் பண்ணியிருக்காளாம். பாஸ் பண்ணி என்ன பிரயோசனம்? இண்டர்வியூ கார்டு வரல்லையே. எல்லாத்துக்கும் கொடுப்பனை இருக்கணும்.'

ஒரு நாள், கழனியிலிருந்து கலப்பையுடனும், உழவு மாடுகளுடனும் குடிசைக்கு வந்த மாயாண்டி, கலப்பையை இறக்கி வைத்து விட்டு மாடுகளுக்கு தண்ணீர் காட்டுவதற்குச் சென்ற போது விசும்பல் ஒலி கேட்டுத் திரும்பிப் பார்த்தார்.

செவந்தியின் கண்களில் கண்ணீர் முட்டி மோதி, அருவியாகக் கொட்டியது.

மாடுகளை அப்படியே விட்டுவிட்டு அவள் அருகே சென்றார். "என்ன செவந்தி? ஏன் அழறே? என்ன வந்தது உனக்கு?"

செவந்தி பதில் பேச முடியாமல் மேலும் குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

அவள் கூந்தலை இதமாக வருடியவாரே, "செவந்தி அழாதேம்மா! உனக்கு என்ன வந்தது? ஆத்தா எங்கே போயிட்டா?" என்றார் மாயாண்டி.

"அப்பா! ஆத்தா தலைமை ஆசிரியரைப் பார்க்க போயிருக்கா. நம்ம பண்ணையாரு மகளுக்கு டீச்சர் உத்தியோகத்துக்கு ஆர்டர் வந்திருக்காம். நமக்கு ஏன் வரல்லேன்னு கேட்கப் போனவதான் இன்னும் வந்த பாடில்லே."

மாயாண்டிக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. இவ்வளவு கஷ்டப்பட்டுப் படிக்க வைத்தோமே! உத்தியோகம் கிடைக்கா விட்டால் மாடுகளும் பறிபோய் விடும். அதுக போனாலும் பரவாயில்லே. உழைத்துச் சாப்பிடலாம். ஆனால் இவ்வளவு கண்ணும் கருத்துமாகப் படித்த செவந்தியை நினைத்துப் பார்க்கும்போது அழுகையே வந்து விட்டது.

தலைமை ஆசிரியர் டவுனிலிருந்து திரும்பியவுடன் தகவல் கேட்டு மாயாண்டியின் குடிசைக்கு வந்தார்.

மாயாண்டி தலைமை ஆசிரியரைப் பார்த்தவுடன் பேச வாயெடுத்தார். துயரம் பேச விடவில்லை.

நிலைமையை நிதானித்த தலைமை ஆசிரியர் "மாயாண்டி! உம்பொண்ணுக்கு உத்தியோகத்துக்கு ஆர்டர் வரல்லேன்னு கவலைப்படாதே. அது சர்க்கார் ஸ்கூலு. கொஞ்சம் லேட்டாய்த்தான் வரும். பண்ணையாரு மகளுக்கு மேனேஜ்மெண்ட் ஸ்கூலுல உத்தியோகம் வாங்கியிருக்காரு. ஏதோ ஐம்பதாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினதாகக் கேள்வி. அதனாலே உடனே உத்தியோகம் கிடைச்சிடுச்சு. உம் மகள் இண்டர்வியூவுக்கு எல்லாம் போயிட்டு வந்திருக்கு.... ஒரு காசு செலவில்லாமலே வரும்... அதுவும் அவள் வாங்கி உள்ள மார்க்குக்கு..."

பேசும்போது குரல் தழுதழுக்க ஆரம்பித்தது. எப்படியோ மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பேசினார். ஆனால் அவருடைய உள் மனத்தில் மனசாட்சி குத்தியது. சும்மா இருக்கிற சங்கை ஊதிக் கெடுத்து விட்டோமோ என்ற எண்ணம் வேறு.

தலைமை ஆசிரியர் கேள்விப்பட்டதை எப்படிச் சொல்ல முடியும்! அதுவும் இந்த மாயாண்டியிடம்!

அவர் கேள்விப்பட்டது இதுதான்:

அரசுப் பள்ளிகளில் ஒரு செகண்டு கிரேடு ஆசிரியை உத்தியோகத்துக்குக் கூட இருபத்தைந்து ஆயிரம் ரூபாய் லஞ்சமாகக் கொடுக்க வேண்டுமாம். ஐந்தாவது ஊதியக் குழு பரிந்துரைக்குப் பின்னர் செகண்ட் கிரேடு டீச்சருக்கு ஆரம்பத்திலேயே இரண்டாயிரம் ரூபாய் மாசச் சம்பளமாம். அதனால், ஒரு வருடச் சம்பளம் தானே! கொடுத்தால் என்ன?' என்கிறார்களாம் அதிகாரிகள்.

மூவாயிரம் ரூபாய்க்கே தாளம் போட்ட மாயாண்டி, இருபத்தைந்து ஆயிரம் ரூபாய்க்கு எங்கே போவார்?

இப்பொழுதெல்லாம் மாயாண்டி செவந்தியையும் கழனிக்கு வேலை செய்ய உடன் அழைத்துச் செல்கிறார். மாடுகள் தான் பறிபோய் விட்டனவே! செவந்தியும் நாற்று நடுவதற்குப் போகிறாள். கதிர் அறுக்கப் போகிறாள். ஆனால் ஓர் எதிர்பார்ப்போடு. எப்பொழுதாவது டீச்சர் உத்தியோகம் கிடைத்து விடும் என்ற மலட்டு நம்பிக்கையோடு.....

காலம் தான் பதில் சொல்ல வேண்டும்!



"ஏம்பா, ரெண்டு இட்லி 2/— ரூபாய்னு தானே விலைப்பட்டியல்லே எழுதியிருக்கு; எனக்கு என்ன 10/— ரூபாய்க்கு பில் தர்றே?"

"ஹி... ஹி... இட்லி 2/— ரூபாய்தான் சார்... நீங்க பையில திருடி வெச்சிருக்கிற ஸ்பூன் 5/— ரூபாய்; அதுக்கு அபராதம் 3/— ரூபாய்!"

— சீர்காழி வி. ரேவதி.



• கிண்டலடிக்கிறோம்!



• கோடி காட்டுகிறோம்!



• கவனிக்கத் தவறினார்!



• தாண்ட மாட்டார்!

• அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

? ஆசிய விளையாட்டுப் போட்டியில் புதிதாகச் சேர்க்கப்பட்ட கபடி விளையாட்டில் இந்தியா தங்கப்பதக்கம் பெற்றது பற்றி...?

! அப்பாடி! கபடியைச் சேர்த்தார்களோ, ஒரு தங்கமாவது இந்தியாவுக்குக் கிடைத்ததோ!

• ம. சண்முகசுந்தரம், பா. மேட்டூர்.

? 'தமிழ் நாட்டில் பலர் நாஸ்திகன் ஆனது சாமி படங்கள் பார்த்துத்தான் என்று கமல ஹாசன் கூறியிருப்பது பற்றி?

! அந்த அளவுகோலின்படி பார்த்தால் இந்தியாவில் வன்முறையே தலைகாட்டக் கூடாதே! எனவே கமல் கிண்டலடிப்பதை ரசிக்கலாம்; ஸீரியஸ்ஸாக எடுத்துக் கொள்ளக் கூடாது!

• மனோபாரதி, பாண்டிச்சேரி.

? தி. மு. க. வை நீங்கள் காழ்ப்புணர்ச்சியோடு தாக்குகிறீர்களா? பொறுப்புணர்ச்சியோடா?

! காழ்ப்புணர்ச்சியோடு நாம் தாக்கப்பட்டாலும் பொறுப்புணர்ச்சியோடுதான் பதில் சொல்கிறோம்.

• உதயம், திருநெல்வேலி.

? தாயக மறுமலர்ச்சிக் கழகம் எப்படி உள்ளது?

! அரிசி தர்மம் மூலம் அரசியல் பண்ணிக் கொண்டிருக்கிறது.

• ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஏ. ஈஸ்வரன்,
தேலூர் மேட்டுக்கடை,
சங்ககிரிவட்டம் — 637 104.

# 'இந்தியாவே இருக்காது' என்கிறாரே கருணாநிதி?

• ஆ. புகாரி, சென்னை.

? 'தேர்தல் மூலமே இ. காங்கிரஸ் ஆட்சிக்கு வர விரும்புகிறது' என்று ராஜீவ் தெரிவித்துள்ளது எப்படி இருக்கிறது?

! வேறு விதத்திலும் ஆட்சியைப் பிடிக்க முடியும் என்று கோடி காட்டுவதாக இருக்கிறது!

• குலசை நஜ்முதீன், உடன்குடி.

? இட ஒதுக்கீடு விவகாரத்தில் இவ்வளவு எதிர்ப்பு ஏற்படும் என்று எதிர்பார்த்தீர்களா?

! நான் எதிர்பார்ப்பதும் எதிர்பாராததும் கிடக்கட்டும்; கண்டிப்பாக எதிர்பார்த்திருக்க வேண்டிய பிரதமர் அதில் தவறி விட்டாரே!

• ஏ. ஈஸ்வரன், தேலூர் மேட்டுக்கடை *

? வாழப்பாடியார் மட்டும் ஜெயலலிதா கிழித்த கோட்டைத் தாண்டுவதில்லையே, ஏன்?

! அவர் கிழித்த கோட்டை இவர் தாண்டினால், இவரது மனக்கோட்டையை அவர் தகர்த்து விடுவாரே!

* கே. பி. சரவணன், அருப்புக்கோட்டை.

? 'பாராளுமன்றத்துக்குத் திடீரென்று இடைத் தேர்தல் வரக்கூடும்' என்று அத்வானி கூறியிருக்கிறாரே?

! அவர் சொன்னால் அதைக் கவனிக்க வேண்டியதுதான். ஏனென்றால் தேர்தலை அவருக்குச் சௌகரியப்படும் போது வைத்துக் கொள்ளும் நிலையில் அவர் இருக்கிறார்!

* எம். கே. சக்திவேல், சேலம்.

? அ. தி. மு. க. தொண்டர்கள் யார் பக்கம்?

! சந்தேகமென்ன; எம். ஜி. ஆர். பக்கம் தான்!

* கவிட் ரவி, கும்பகோணம்.

? 'அண்ணா பெரியார் சிலைகளுக்கு மாலை போடப் போகாததற்குக் காரணம் என்னால் படியேறக் கூட முடியாமல் இருப்பதுதான்' என்று ஜெயலலிதா கூறியிருக்கிறாரே?

! ஆட்சி பீடத்தைக் காட்டுங்கள்; மளமள வென்று எத்தனை படிகளானாலும் ஏறி அமர்ந்து விடுவார்!

* தேரோட்டி, மன்னார்குடி.

? முத்துராமன் — தேவிகா ஜோடி; கார்த்திக் — கனகா ஜோடி — ஒப்பிடுக.

! அப்பா — அம்மா ஜோடி அமைதியான அழகு. பிள்ளை — பெண் ஜோடி ஆர்ப்பாட்டமான அழகு. ('இந்த மாதிரி கேள்விக்கெல்லாம் உன்னை யார் பதில் சொல்லச் சொன்னது?' என்று வாசகர்கள் தாக்க ஒரு வாய்ப்புத் தர வேண்டாமா!... ஹி... ஹி...)

* கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

? 'தமிழகத்தில் பணிபுரியும் ஆசிரியர்களுக்குத் திறமை இருக்கிறது; ஆனால் பலர் தங்கள் கடமையில் ஈடுபாட்டுடன் இருப்பதில்லை' என்று அன்பழகன் கவலை தெரிவித்துள்ளாரே?

! இதையேதான் ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள் பற்றியும் அதிகாரிகள் குறித்தும் மக்கள் கூறிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதெல்லாம் அவர்கள் காதில் விழாது!

* மல்லிகை மன்னன், மதுரை.

? 'மண்டல் கமிஷன் பரிந்துரைகளை வாபஸ் பெற்றால், இந்தியாவே காணாமற் போய் விடும்' என்று கருணாநிதி ஆவேசப் படுகிறாரே?

! முன்பு இப்படித்தான் 'இந்தியாதான் இந்திரா' என்று பரூவா சொன்னார். இப்போது வி. பி. சிங்கை வைத்துப் பூச்சாண்டி காட்டுகிறார், கலைஞர். 'மனத்தாபம் அதிகரிக்கும் போது கோபம் வந்து விடுவதால் எந்த விஷயத்திலும் உண்மையை அறிய முடியாமல் போகிறது' என்று கூறியவர் வள்ளுவர் (இகல் — 857).

* அ. முஸ்தபா, தக்கோலம்.

? தற்போது யாரை நினைத்தால் உங்களுக்குப் பாவமாய் இருக்கிறது?

! மதுவிலக்கை ரத்து செய்து, மலிவு விலை சாராய உற்பத்தி, விநியோகத்துக்கும் ஏற்பாடு செய்து விட்டு, மதுவிலக்குப் பிரசாரத் திரைப்படம் காட்ட அரசின் ஆதரவு வழங்கும் கருணாநிதியை எண்ணினால்தான் ரொம்பப் பாவமாய் இருக்கிறது. குதிரைப் பந்தய ஒழிப்பு நினைவாகக் குதிரைச் சிலைகளை இவர் நிறுவியது போல், 'ஒரு காலத்தில் இங்கே மதுவிலக்கு இருந்தது' என்பதை நினைவூட்டவும் ஒரு சிலைக்கு இவர் ஐடியா கொடுத்து, வரிப் பணம் செலவிட்டு அதனை நிறுவினாலும் வியப்பதற்கில்லை!



• தேர்தல் 'அறிவிப்பார்'!



• காரணம் கூறுகிறார்!



• கவலை தெரிவிக்கிறார்!



• ஆவேசப்படுகிறார்!




# மேனகா காப்பாற்றினார்!

வின்சென்ட்

காலை எழுந்து, நியூஸ்பேப்பரைப் பிரித்து வைத்துக் கொண்டு, ''ராஜம், 'காப்பி!'' என்று ஆர்டர் கொடுத்தேன்.

''முதல்லே போய்ப் பல்லைத் தேய்ச்சுட்டு வாங்க!'' என்றாள் என் மனைவி.

''நம்ம ஜிம்மிக்குத் தினம் காலையிலே பால் ஊத்தறே. அது என்ன பல்லைத் தேய்ச்சுட்டா குடிக்குது. அது மாதிரி நினைச்சு எனக்குக் காப்பி கொடுத்துட்டுப் போயேன்'' என்றேன்.

''நாய் பல் தேய்க்குதா, பூனை பல் தேய்க்குதாங்கற கதையெல்லாம் இனிமே செல்லுபடியாகாது. பேப்பரை ஏழாவது பக்கத்துக்குத் திருப்பிப் பாருங்க – லண்டன்லே நாய்களுக்காகப் பிரத்யேகமா டூத்பேஸ்ட் தயாரிச்சு மார்க்கெட்ல விட்டிருக்காங்க!''

''அட! 'எய்ட்ஸ்'க்கு மருந்து கண்டு பிடிக்கறேன்னு டயத்தை வேஸ்ட் பண்ணாம, உருப்படியா நாய்க்குப் பேஸ்ட் கண்டுபிடிச்சிருக்காங்களே! அந்த பேஸ்ட் நம்ம ஊருக்கு எப்போ வருமோ...!'' என்றபடி பல் தேய்க்க எழுந்து போனேன். இல்லாவிட்டால் காப்பி கிடையாது. ராஜம் சொன்னால் சொன்னதுதான்.

எப்போ வருமோ என்று கேட்டது, அடுத்த வாரமே வந்துவிட்டது! டி.வி. விளம்பரத்தோடு! 'லொள் லொள்' விளம்பரத்தில் நடிகை மருக்கொழுந்து, ஒரு வாலறுந்த நாயைக் கொஞ்ச, அசரீரியாக ஒரு குரல் – ''நாய்க்கு எப்படிங்க கொஞ்சி முத்தம் கொடுக்கறீங்க... நாறலையா?'' என்று கேட்க, மருக்கொழுந்து, ''என் நாய் தினம் காலை, மதியம், மாலை, இரவு மற்றும் சாப்பிடுவதற்கு முன், சாப்பிட்ட பின், தவறாமல் 'லொள் லொள்' டூத்பேஸ்டினால் பல் துலக்குகிறது. அதனாலே அதன் சுவாசம் மணம் வீசுது. என்னா இதுல மவுத் வாஷ் இருக்கு, ரொம்பு தைலம் இருக்கு! ஓ ஃப்பூ!'' என்றாள்.

நாயின் வாய் மூச்சு பற்றிய இந்த விஸ்தாரமான விளம்பரத்தை மூச்சைப் பிடித்தபடி பார்த்துக் கொண்டிருந்த ராஜம், பிடித்த மூச்சை விடவும் மறந்து என் பக்கம்



## அருள்வாக்கு

"ஸமயாசார வேலியை நீ உடைக்கலாம்" என்று சீர்திருத்தத் தலைவர் முதலில் சொல்லிக் கொடுத்தால் அப்படி உடைத்து ஸ்வதந்த்ரத்தில் ருசி கண்ட ஜனங்கள், "நீ போட்டிருக்கும்'மாரல்'வேலியையும்உடைப்பேன்" என்று பிற்பாடு அவரிடமே திருப்பிக் கொள்கிறார்கள்.

கதைசொல்வார்கள்.பிரதிவாதிகடனைத் திருப்பித் தரவில்லை என்று வாதி பிராது போட்டானாம். பிரதிவாதியின் வக்கீல் தன் கட்சிக்காரனிடம்,"நீ(கோர்ட்டில்)பைத்தியக் காரன் மாதிரி நடி; என்ன கேள்வி கேட்டாலும் 'பெப்பே' 'பெப்பே' என்று பேத்திக் கொண்டிரு. 'சித்தப்பிரமம் பிடித்தவன்; இவன் மேல் கேஸ் போட்டது தப்பு' என்று ஜட்ஜ் தள்ளுபடி பண்ணிவிடுவார்" என்று சொல்லிக் கொடுத்தாராம். பிரதிவாதியும் அதே மாதிரிப் பண்ணி வியாஜம் தோற்றுப் போகும்படி செய்து விட்டானாம். கோர்ட்டுக்கு வெளியே வந்தவுடன் வக்கீல் அவனிடம் ஃபீஸ் கேட்டாராம். உடனே, அவன் அவரிடமும் அவர் சொல்லிக் கொடுத்த தந்த்ரத்தையே திருப்பினானாம். "பெப்பே, பெப்பே" என்றானாம். "என்ன? என்கிட்டேயுமா இப்படிப் பண்ணுகிறாய்?" என்று வக்கீல் கேட்க, "உன்கிட்டே மட்டுமென்ன? உன் அப்பன், பாட்டன் வந்தாலும் இதேதான் நடக்கும்" என்று அர்த்தம் தொனிக்க,"உனக்கும் பெப்பே; உங்க அப்பனுக்கும் பெப்பே" என்றானாம்.

"சாஸ்திர ரூலுக்கும் பெப்பே; உன் ரூலுக்கும் பெப்பே" என்று எந்த ஒழுங்குமில்லாமல் போக ஆரம்பிக்கிறார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

திரும்பினாள்.

"இப்பவே போய் 'லொள் லொள்' வாங்கிட்டு வந்துடுங்க... நம்ம ஜிம்மிக்கு நாளைக்குக் காலைல முதல் காரியமாத் தேய்ச்சு விட்டுடணும்...."

"இப்பவே போகணுமா? நாளைக்கு ஆபீஸ்லேர்ந்து வரும்போது வாங்கியாரேனே..." — ஒலியும் ஒளியும் 'மிஸ்' ஆகிவிடுமே என்ற ஆதங்கத்தில் நான் இழுக்க, ராஜம் வள்ளென்று விழுந்தாள்.

"ஆமாம்! அப்பத்தானே நாளைக்குக் காலை ஆறு மணிக்கே அலட்டி ராதா போன் பண்ணி, 'எங்க லில்லிக்கு 'லொள் லொள்' தேய்ச்சுவிட்டார் இவர்...'னு பீத்திக்குவா..."

ராஜத்தின் பெருமூச்சுப் புயலுக்குப் பயந்து லொள் லொள் வாங்கப் பறந்தேன்.

மறுநாள் காலை 'லொள் லொள்' ளை ஸ்பெஷல் லொள் லொள் டீலக்ஸ் டாக் பிரஷ்ஷில் பரப்பி, ஜிம்மியைக் கிணற்றடிக்கு அழைத்தேன்.

வாலைக் குழைத்துக் கொண்டு வந்து நின்றது. "ஈ காமிடா..." என்றேன். ஜிம்மி பரப்பிரம்மமாய் என்னைப் பார்த்தது.

"இதபாரு ஈ.... ஈ.... ஈ...." என்றேன் உதடுகிழிய.

"என்ன சார்! பையனுக்கு ஆனா ஆவன்னா சொல்லித் தர்றீங்களா....?" — மதில் சுவருக்கு மேலாய்ப் பக்கத்து வீட்டுப் பரசுராமனின் தலை முளைத்துக் கேட்டது.

நான் ஈ சொல்வதை நிறுத்திவிட்டுப் பல்லைக் கடித்துக் கொண்டேன்.

"ஓ! ஜிம்மிக்குப் பல் தேய்க்க ஏற்பாடா? எங்க ஜில்லிக்கு இந்த அவஸ்தையெல்லாம் வேண்டாம்னுதான் நான் விக்குவிட் டையட்டா குடுத்துடறது."

"ஆமாமாம்! நீங்க ஜில்லிக்கு ஊத்தற பால் எவ்வளவு 'விக்குவிட்'னு எனக்குத் தெரியாதாக்கும்!"

— பரசுராமனுக்குக் காது மந்தம் என்ற தைரியத்தில் நான் முணு முணுத்தது ஜிம்மியின் பாம்புக் காதில் விழுந்து விட்டது.

தனது பரம வைரியான ஜில்லி (பூனைக்கு வைக்கற பெயரா அது!) யின் பெயரை நான் உச்சரிக்கக் கேட்டு, ஜிம்மி சிலிர்த்துக் கொண்டு பல்லைக் காட்டி 'கிர்ர்' என்று உருமியது.

இதுதான் சமயம் என்று பிரஷ்ஷை ஜிம்மியின் வாயினுள் நுழைத்து நாலு இழு இழுத்தேன்.

அவ்வளவுதான்! டீ.வி. சோப்பு விளம்பரம்போல் நுரை பொங்கி என் முகம், கழுத்து, கை என்று ஒட்டிக் கொண்டது! அப்போது அங்கே வந்து சேர்ந்த என்

# தமிழ்நாடு. டெல்கோவின் வளர்ச்சிக்கோர் உறுதுணை!



டாடா வாகனங்களின் உயிர்நாடி தமிழ்நாட்டில் உருவான இணைப்பகுதிகளும் துணைபாகங்களுமே ஆகும். தமிழ்நாட்டிலிருந்து 1989-90ல் ரூ. 170 கோடி மதிப்புள்ள பாகங்களை வாங்கியுள்ள டெல்கோ, 1983-84 முதல் இன்றுவரை ரூ. 724 கோடிக்கும் மேலான இத்தகைய பாகங்களை இதுவரை எவரும் வாங்கியிராத மதிப்பளவிற்கு வாங்கியுள்ள ஒற்றை நிறுவனமாகும்.

தமிழ் மக்களது கைவண்ணத்தில் உருவான இன்றியமையாத இணைபாகங்களே டாடா வாகனங்களின் இயக்கத்திற்கு முக்கிய ஆதாரமாகும்.

தமிழ்நாடெங்கிலும் உள்ள 70 தொழிலகங்களிலிருந்து 1983-84 முதல் ரூ. 724 கோடிக்கும் மேலான மதிப்புள்ள இணைப் பகுதிகளையும் துணை பாகங்களையும் வாங்கியுள்ளது டெல்கோ.

இத்தொழிலகங்கள் 32000 தமிழ் மக்களுக்கு வேலை வாய்ப்புகள் அளித்துள்ளன.

இந்த 32000 தமிழ்நாட்டு மக்கள் ஏர் பிரேக்குகள், ஹைட்ராலிக் பிரேக்குகள், பிரேக் லைனிங்ஸ், க்ளட்ச்கள், க்ராங்க் ஷாஃப்ட்டுகள், டயர்கள், வீல் ரிம்ஸ், மின்பகுதிகள்—ஹெட் லாம்ப்ஸ், ஆல்ட்டர்னேட்டர்ஸ், ஸ்டார்ட்டர்கள், வைப்பர்கள்—மற்றும் எஞ்ஜின் வால்வுகள், ஃபாஸனர்கள், பிஸ்டன் ரிங்குகள், மிஷின் பகுதிகள், டைராடுகள், ரேடியேட்டர்கள், வாட்டர் பம்ப்புகள், வைப்ரேஷன் டாம்ப்பர்கள் இத்தகைய தயாரிப்புத் துறைகளிலே பணிபுரிகின்றனர்.

பாடி பில்டிங் மற்றுமொரு பணித்துறை ஆகும்.

இன்று டாடா வாகனங்கள் சாலைகளிலே கம்பீரமாக இயங்குகின்றனவென்றால் அதில் எந்த அளவிற்கு தமிழ் மக்களது கைவண்ணம் மேலோங்கியுள்ளது என்பது உண்மையில் விவரிக்க முடியாத ஒன்றாகும்.

வாழ்க தமிழ்நாடு! வளர்க டெல்கோ - தமிழக நட்புறவு!!



டாடா வாகனங்களின் பிரதிபலிப்பு
தமிழ் மக்களது ஒத்துழைப்பு



டாடா என்ஜினியரிங் & லோகோமோட்டிவ் கம்பெனி லிட்.

மூன்று வயது புத்திரசிகாமணி 'அப்பா ஷேவிங்' என்று மழலையாய் மிழற்ற, அது மட்டும் செவிட்டுப் பரசுராமனின் காதில் விழுந்து, அவர் இடி இடியென்று சிரித்தார்!

ஜிம்மிக்கு பேஸ்டின் சுவை மிகவும் பிடித்துப் போயிற்று. ஏதோ நொறுக்குத் தீனி சாப்பிடுவதுபோல் ஒரு நாளைக்குப் பத்து தரம் குரைத்து, அடம் பிடித்துப் பல் விளக்கி, மூன்று நாளைக்கு ஒரு பேஸ்ட் ட்யூபைக் காலி செய்தது.

"ராஜம்! இது நமக்குக் கட்டுப்படியாகாது. பாவக்காயை அரைச்சு எடுத்தா சொல்றேன்..." என்று பேஸ்டில் பாவக்காய் விழுதைக் கலந்து ஜிம்மியின் பல்லை விளக்கினேன்.

அவ்வளவுதான்! ஜிம்மி துள்ளிக் குதித்து ஊளையிட ஆரம்பித்தது. தினம் காலையில் பேஸ்ட் பிளஸ் பாவக்காய் விழுது போட்டுப் பல் தேய்த்து விட்டதும் அரை மணி நேரம் வரை ஊளை நின்றால்தானே..!

மறுநாள், அடுத்த நாள், மூன்றாம் நாள் என்று இதே பாவக்காய் விழுது கலந்த பேஸ்ட், பல் விளக்கல், ஊளை, காம்பினேஷனில் ஆபீஸுக்கு அரை மணி லேட்.

நான்காம் நாள், ஜிம்மி ஊளையிட ஆரம்பித்ததும் எதிர் வீட்டுப் பெண் வந்தாள். 'உடனே நாயின் ஊளையை நிறுத்தாவிட்டால் மேனகா காந்திக்குப் பெட்டிஷன் போடுவேன்' என்று அவள் மிரட்ட, ராஜம், எங்கே, அலட்டி ராதா வரை விஷயம் போய்விடுமோ என்று பயந்து ஜிம்மிக்குப் பல் தேய்த்துவிடும் படலத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

நானும் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். இனிமேல் நான் மட்டும் காப்பிக்கு முன் பல் தேய்த்தால் போதுமே!

## Toothpaste for dogs

LONDON: London's luxury department store Harrods has presented a new toothpaste for dogs that fights tooth decay and promises to give the pets fresh breath. Britain has nearly seven million dogs and their life expectancy is increasing. But often they have decaying teeth and gums and their breath smells foul because they are fed on dog food that is soft, said Dr. Roger Mugford, an animal behaviourist. — DPA

**நகைச்சுவைக் கதைக்கான யோசனை அனுப்பியவர்: லலிதா பிரபாகர், சென்னை — 83.**






## பாபாவின் அன்புள்ளம்

**மனிதர்கள் ஒருவருக்கு ஒருவர் உதவினால் மட்டும் போதாது. அப்படி உதவுவதில் மகிழ்ச்சி அடைய வேண்டும். ஆண்டவனிடம் பக்தி உள்ளவர்கள், ஆண்டவனின் படைப்புக்களிடமும் பக்தி உள்ளவர்களாக இருக்க வேண்டும். அப்படிப் பார்க்கும் போது பிறருக்கு உதவுவது நமது புனிதக் கடமையாகிறது. பிறரிடம் பரிவு காட்டுவது எல்லா மதங்களுக்கும் அடிப்படை தர்மம். எனவே உலகின் மிகச் சிறந்த மதம்; உலகின் ஒரே மதம் அன்பு மதம்தான்.**

**(ஸ்ரீ சத்ய சாயி பாபா தம்மைச் சமுதாயப் பணிகளுக்காக அர்ப்பணித்துக் கொண்ட பொன் விழா ஆண்டு.)**

# தேவேந்திரா சாரீஸ்

**மிக மிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது**

H.O.27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை–3. போன்– 583 213
கிளை ஷோ–ரூம் கடை எண். 7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை–17. போன்–443367

## தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்

• காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38 W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி–110 005, போன்–581050, 561786 • மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41, சரஸ்வதி மார்க், W.E.A. கரோல் பாக், புதுடில்லி. –110 005 • காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ் (சவுத் என்டு) 9ஏ/40 W.E.A. கரோல் பாக், புதுடில்லி. போன்–5723981 • பங்கஜம் சுந்தரராஜன், C6/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடெல்லி–67. • நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்–19. • சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, பிவந்திவாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய்–400019. • லதா கிருஷ்ணன், பிளாட் நெ 20, காமதேனு கோ.ஆப்.வெல்டம் சாகர், செம்பூர், பம்பாய்–89 (கிளாஸ் பாக்டரி அருகில்). • ஜெயஸ்ரீ, 3–ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா–26. • திருமதி. டி.எஸ்.சகுந்தலா சீனிவாசன், 18/1–ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர். போன்–224357, 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து) பெங்களூர்–560003. • திருமதி. துர்க்கம்பாள், 22, சேஷபுரம், தென்னூர், திருச்சி– 620017. • திரு. எஸ்.சேதுராமன், 50/பி, பாணாதுறை தெற்கு வீதி, கும்பகோணம். போன்–20972. • திருமதி. எஸ்.லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம்–1, (ரயில்வே ஸ்டேஷன் அருகில்). • ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, செங்குப்தா தெரு, கோயமுத்தூர்–9. • ஸ்ரீமுருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர்.எஸ்.புரம், கோவை–2. • மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி–1. போன்–4191. • மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங் (உள் புறம்), 175/11, மேல வீதி, சிதம்பரம். • ஹேமாவதி ஏஜென்சீஸ், 2711, நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர். • பாகீரதி மூர்த்தி, 10ci, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. • எஸ். சுந்தரம், 9, சாஸ்தான் கோயில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்–2. • திருமதி. கே. சீதாலட்சுமி, 41, 4–வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை–28. போன்–73144. • திருமதி. சாவித்திரி பாலசுப்பிரமணியம், 3, 7–வது தெரு, நங்கநல்லூர், சென்னை–61 (பிள்ளையார் கோவில் அருகில்). போன்–433737. • சரோஜா கிருஷ்ணமூர்த்தி, ஏ.பி.1186, 4வது தெரு, தென்றல் காலனி, (P.T.C. டிப்போ எதிரில்) அண்ணா நகர், சென்னை–600040. • பாலாஜி கிளாத் சென்டர், 22–ஏ, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை–45. • திருமதி. சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை–44. • எஸ்.பொன்னப்பன், 8.3.282, 2–வது பஜார், செகந்திராபாத் (ஆ.பி.). போன்–59562. • ராணி சாரீஸ், ராணி வி.சுந்தர்ராவ், 13, மஹால் 4–வது தெரு (திருமலை நாயகர் மஹால் பின்புறம்), மதுரை – 625 001. போன்–26295, • ஆர்.கிருஷ்ணமூர்த்தி, பெரிய கண்ணாரத் தெரு, மயிலாடுதுறை. • திருமதி. கமலா நாகஸ்வாமி, 40.ஸரஸ்வதி நகர், கடலூர். பிரேமா குருராஜன், 100 சன்னதி தெரு, பாப்பாரபட்டி, தர்மபுரி தாலுகா – 636 809.

**குறிப்பு – மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.**

# தீபாவளிப் பரிசுகள்!

**கருத்து: ஜாலி**

இந்தாங்க,
பூமராங் பேனா!
இதனாலெந்தச்
சட்டத்தை நீங்க
எழுதினாலும்
பின் விளைவு
உங்களையே
தாக்கும்!





டிக்கெட்
பரிசோதகர்
சீருடை உங்களுக்கு
ரொம்ப டாப்பாப்
பொருந்துதுங்க.
முற்படுத்தப்பட்ட
வங்களை இறக்கி
விடறதுன்னாலும்
ஒரு பந்தாவா
இருக்கும்...

நம்ம ஆளுங்க நமக்குக்
கோந்து பரிசளிச்சது
பெரிசில்லே, பாட்டிலை
ஜெயலலிதா வடிவத்திலே
தயாரிச்சிருக்காங்களே
அதைச் சொல்லு!




இந்தாடிம்மா,
நம்மாத்திலே
உனக்காகவே
ஸ்பெஷலா
தீபாவளி மருந்து
தயாரிச்சேன்.
தினம் ஒரு நெல்லிக்கா
அளவு உருட்டி
வாயிலே போட்டுக்கோ...
மூட்டு வலி, முழங்கால்
வலி, தலைவலி,
முதுகு வலி எல்லாம்
ஓடிப் போயிடும்...
உடம்பு கூட
இளைச்சுடும்னா
பார்த்துக்கோயேன்!



என்ன, ரா.கி.ரா! நம்ம
வாசகர் ஒருத்தர் நமக்குப்
'பிரபலங்களின் விலாசம்'
புத்தகம் ஒண்ணு தீபாவளி
பரிசா அனுப்பியிருக்கார்.
செல்லப்பாவுக்கு ...போன்
பண்ணி, கல்கி கார்ட்
ஒன்ல வேணும்னா
இதையும் சேர்த்துக்க
லாம்னு சொல்லுங்க!

ஆதரவு!
வாபஸ்!
ஆதரவு!
வாபஸ்!






செ




**கல்லூரித் தேர்தல்கள் அவசியம்தானா? மாணவர் போட்டி**

# போலீஸ் புகாத புதுமுறைத் தேர்தல்!

**ரூ. 50 பரிசு பெறும் கட்டுரை**

வாசலெங்கும் வண்ணத் தோரணங்கள்; வருவோர் போவோரிடம் வழங்கப்படும் பிட் நோட்டீஸ்கள். காம்பவுண்டுச் சுவர்களிலும் தார்ச் சாலைகளிலும் கரிக் கட்டிகளாலும் சுண்ணாம்புக்கட்டிகளாலும் எழுதப்பெற்ற வாசகங்கள்; பேருந்துகளில் ஒட்டப்படும் பெரியரக, புகைப்படத்துடன் கூடிய வாக்குறுதிப் போஸ்டர்கள்; எங்கும் இனிப்பு வினியோகம்! — என்ன இது?

ஒரு கல்லூரிப் பேரவைத் தேர்தலுக்கான ஏற்பாடுகள்தாம்! அரசியல் கட்சிகளுக்குப் போட்டியாக இத்தேர்தல்கள் விசுவரூபம் எடுத்து வருகின்றன.

நம் நாட்டு சட்டமன்ற, பாராளுமன்றத் தேர்தல் முறைகளை முன்கூட்டியே மாணவர் அறிந்து கொள்ளும் நோக்கில் நடத்தப் பெறுபவைதாம் கல்லூரித் தேர்தல்கள். ஆனால் இங்கு இவை விளையாட்டாகச் செயல்படுத்தப்பட்டு வினையாக முடிகின்றன.

அரசியலில் பணம் விளையாடுவது போல இங்கும் பணம் பந்தாடப்படுகிறது. சமயங்களில் அலங்கார வளைவுகள் கூட வைக்கப்படுகின்றன. 'தேர்தலுக்கு உழைக்கிறேன் பேர்வழி' என்று வகுப்புகளுக்கு மட்டம் அடித்தல். நடைபெறும் உழைப்பின்(!) ஊடே அவ்வப்போது சுறுசுறுப்புக்கு 'புகையாற்றல்' வேறு. காசு செலவு; உடலுக்கு மாசு. இரவு பகலாகத் தூக்கமின்மை. இது போதாதென்று பல கடைகளிலும், கம்பெனிகளிலும் சென்று வசூல் நடைபெறுகின்றது. விரிவான விளம்பரங்களினால் பணம் விரயமாகிறது.

இன்னொரு வருந்தத்தக்க விஷயம் கட்சி ஊடுருவல். குறிப்பிட்ட கட்சியை ஆதரிக்கும் மாணவர்கள் குழுக்களாகப் பிரிய இதில் 'அணிகள்' வேறு உருவாகின்றன. தம் கட்சி சார்பாகப் போட்டியிடும் மாணவரே வெற்றி பெற வேண்டும் என்ற நோக்கில் வன்முறைகள். நல்ல நண்பர்களே பகைவர்களாக மாறக் கூடிய வாய்ப்பு. தேர்தல் நேரத்தில் கல்லூரி வளாகத்தினுள் மாணவர்களைக் காட்டிலும் 'மற்றவர்களே' அதிகம். அடிதடியோடு ஆளையே 'தொலைத்துக் கட்டிவிடும்' அநியாயம் வேறு நடைபெறுகிறது. கல்லூரிக்குள் காவலர் புகுந்து தம் கடமையைச் செய்யும் வண்ணம் வன்முறை மேலோங்கி விடுகிறது. தடியடிப் பிரயோகம், கண்ணீர்ப்புகை — இதெல்லாம் காளையர்க்குத் தேவையா?

அதற்காக இத்தேர்தல் முறையை முற்றிலும் ஒழிப்பதும் சரியல்ல. தேர்தல் அவசியம் தான். ஆனால் செய்முறையைச் சிறிது மாற்றியமைக்கலாம். வன்முறையும் பணச் செலவும் ஏற்படா வண்ணம் மிக எளிமையாகச் செயல்படுத்தலாம்.

கல்லூரியில் நடத்தப் பெறும் ஒவ்வொரு பிரிவு வகுப்புக்கும் ஒவ்வொரு 'மாணவர்' 'வகுப்பு பிரதிநிதியாக'த் தேர்ந்தெடுக்கப் பட வேண்டும். இம்முறை எளிதாக வகுப்புகளிலேயே நடைபெறலாம். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட வகுப்புப் பிரதிநிதிகள் அனைவரும் ஒன்றுகூடித் தங்களுக்குள் தகுதியான ஒருவரை மாணவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கலாம். இதில் ஒரு சிறப்பம்சம் என்னவென்றால் அந்தந்த வகுப்புக்குரிய பிரச்னைகள் அந்தந்தவகுப்புப்பிரதிநிதியின் மூலம் மாணவர் தலைவரிடம் எடுத்தியம்பப் பட்டு, பின் கல்லூரி நிர்வாகத்தின் கவனத்திற்குக் கொண்டு செல்லப்படும்.

இப்போதுள்ள முறையில் தலைவர் கலைப்பிரிவைச் சார்ந்தவர் எனில் விஞ்ஞானப் பிரச்னையையும், விஞ்ஞானப் பிரிவைச் சார்ந்தவர் எனில், கலைப் பிரச்னையையும் அறிந்து கொள்வதில் சிரமம் தோன்றலாம். ஆனால் நான் விவரித்த புது முறையில் வகுப்புப் பிரதிநிதிகளால் அந்தந்த வகுப்புக்குரிய பிரச்னைகள் பட்டியலிடப்படும் போது மாணவர் தலைவரும், அந்தப் பிரதிநிதியும் ஒன்று கூடி விவாதித்துத் தக்க தீர்வைக்



காணலாம். பின் அத்தீர்வை அனைத்துப் பிரதிநிதிகளிடமும் காட்டி, ஒப்புதல் பெற்ற பின், கல்லூரி நிர்வாகத்திடம் அனுப்பலாம்.

கல்லூரி என்பது சாதி, மத, இன, அரசியல் பேதமின்றி ஒன்றுகூடி, கல்வி கற்று, மன உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ளும் தெய்வ சந்நிதானமேயாகும். அங்கு மாணவர்களிடம் ஒற்றுமை வளர வேண்டுமே தவிர வேற்றுமை விளையக் கூடாது.

— க. சிவராஜன்,
முதுநிலை பொது நிர்வாகம் முதலாமாண்டு,
அரசியல் அறிவியல் துறை,
மதுரை காமராஜர் பல்கலைக் கழகம்,
பல்கலை நகர், மதுரை — 625 021.

## அரியர்ஸ் வைக்கக் கூடாது!

கல்லூரி மாணவர்கள் தேர்தலினால் வன்முறை பெருகிவிட்டது எனக் காரணம் காட்டி, கல்லூரிகளில் தேர்தலை நிறுத்துவது, மாணவர்களின் தலையாய உரிமையைப் பறிப்பதாகும். கல்லூரி நிர்வாகம் மாணவர்களைக் கட்டுப்படுத்தி அமைதியான முறையில் தேர்தலை நடத்திக் காட்ட வேண்டும்.

"தேர்தலில் நிற்கும் மாணவன் அரியர்ஸ் ஏதும் வைத்திருக்கக் கூடாது" என்ற விதி கட்டாயம் கடைப்பிடிக்கப்பட வேண்டும். இது மாணவர்கள் படிப்பதற்குத் தூண்டுகோலாக அமைவதுடன் படிப்பை பின்னுக்குத் தள்ளி அரசியலை மட்டுமே எண்ணுகிற மாணவர்களைத் தேர்தலில் நிற்க இயலாமல் செய்து வன்முறை குறைவதற்கு உதவும். கல்லூரித் தேர்தல் கல்லூரியின் வளாகத்தில் மட்டுமே நடைபெற வேண்டும். வெளியில் பிரசாரம் செய்வது, போஸ்டர் ஒட்டுவது, வாகனங்களில் ஊர்வலம் வந்து ஆர்ப்பாட்டம் செய்வது, ஆகிய செயல்களினால் 'மாணவர்கள் ரௌடிகள்' என்ற எண்ணத்தையே பொதுமக்களிடம் ஏற்படுத்துகிறார்கள். இதைத் தடுக்க வேண்டும். தேர்தலில் நிற்கும் மாணவன் யாரும், தனக்கு அரசியல் கட்சி ஒன்றின் ஆதரவு இருக்கிறது என பிரசாரம் செய்வதோ, அந்தக் கட்சியின் கொடி, சின்னம், தலைவரின் படம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதோ கூடாது என்று கல்லூரி நிர்வாகம் கட்டளை பிறப்பிக்க வேண்டும். கட்டளையை மீறுபவர்கள் வேட்பாளராக நிற்கும் தகுதியை இழப்பர் என அறிவித்தல் அவசியம்.

கல்லூரி தேர்தல்களின் நோக்கமே, மாணவர்களின் குறைகளை, பிரச்னைகளை வெற்றி பெறும் மாணவர் மூலம் நிர்வாகத்திற்கு எடுத்துரைத்து அவற்றைத் தீர்க்க வழி வகை செய்வதுதான். ஆனால் இன்று தேர்தல் என்பது மாணவர் கோஷ்டிகளின் கட்சி பலத்தை நிரூபிப்பதாகவே உள்ளது. கல்லூரித் தேர்தலுக்கு முன் விடுமுறை தேவையில்லை. தேர்தல் முடிந்து முடிவு அறிவித்தவுடன் கல்லூரியை மூன்று நாட்களுக்கு மூடி, விடுமுறை விடுவது வெற்றி பெற்றவர்களின் வெறித்தனமான ஆர்ப்பாட்டத்திற்கு முடிவுகட்டும்.

ஒரு நகரத்தில் உள்ள எல்லாக் கல்லூரிகளையும் சேர்த்து 'அனைத்துக் கல்லூரி மாணவர் தேர்தல்' நடத்த கட்டாயம் அனுமதிக்கக் கூடாது. இதனால் கல்லூரிகளுக்கிடையேயான மாணவர்கள் மோதல் பெரும் அளவில் வெடிக்கும்.

— இரா. அருள்மொழி,
ஆதிபராசக்தி பொறியியல் கல்லூரி,
மேல்மருவத்தூர்.

## மாணவர் தேர்தல்: நட்புக்கு அடிப்படை!

மாணவர் பேரவைத் தேர்தல்கள் பிளவை உண்டு பண்ணுவது போல் தோன்றினாலும், தேர்தல்தான் நட்புக்கு அடிப்படையாக அமைகிறது என்பதே உண்மை. முதல் வருட மாணவர்களிடமும் வோட்டுப் பெற வேண்டும் என்பதால் எவரும் அவர்களை 'ராகிங்' செய்வதில்லை. அப்படியே தவறி ஓரிருவர் ராகிங் செய்தாலும் தேர்தலில் நிற்பவர்கள் அதைத் தடுத்து விடுகிறார்கள். சீனியர் மற்றும் ஜூனியர் மாணவர்களிடையே ஏற்பட்ட நட்பு அப்படியே நீடிக்கிறது. பேரவைத் தேர்தல்களில் போட்டியிடுபவர்கள் மற்ற மாணவர்களை நன்கு தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. நட்பு உறுதிப்படுகிறது.

வென்றவருக்கும், தோற்றவருக்கும் இடையே ஏற்படும் பகை, அரசியல் போல் பெருஞ் செலவு, வன்முறை இவைதாம் பிரச்னைகள். இவை தவிர்க்கப்படக் கூடியவையே. தேர்தல் செலவுகளுக்குக் கல்லூரி நிர்வாகம் கட்டுப்பாடுகளை ஏற்படுத்தலாம். இதைச் செயல்படுத்தினாலே பல பிரச்னைகள் குறைந்துவிடும்.

மாணவர் பேரவைத் தேர்தலை வேண்டாமென்பது தவறாகும். முன்யோசனையுடன் செயல்பட்டால் முறையான, வன்முறையற்ற தேர்தல் நடைபெற முடியும். நல்லெண்ணமே பெருகும்.

— ஆ. செல்வதுரை,
நந்தனம் கலைக் கல்லூரி,
சென்னை.

ஆஸ்திக அன்பர்களுக்கு ஓர் நற்செய்தி

## சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்த ராம தீக்ஷிதர்

அவர்களால் பிரசுரம் செய்யப்பட்ட

# ஜய மங்கள ஸ்தோத்ரம்

மறு பதிப்பாக வெளிவருகிறது.

286 ஸ்தோத்ரங்கள் ஸம்ஸ்க்ருத மூலம் தமிழ் அர்த்தத்துடன்
சுமார் 2000 பக்கங்கள்

(13 பாகங்களும் சேர்ந்து)
2 பாகங்கள் — விலை ரூ.250.00

15.11.90 க்குள் முன் பணம் அனுப்புபவர்களுக்கு
சலுகை விலை (தபால் செலவு உட்பட) — விலை ரூ.200.00

**தற்சமயம் விற்பனையில் உள்ளது**

சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்த ராம தீக்ஷிதர்
அவர்களால் எழுதப்பட்ட
ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் ஸுந்தர காண்டம் — விலை ரூ.55.00

ஸ்ரீமந்நாராயணீயம் 3 பாகங்கள் — விலை ரூ.150.00

பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

N. ராம தீக்ஷிதர்
நெ.1, கூம்ஸ் தெரு, சென்னை 600 001.
போன்: 584 585, 588 572

---

## புதிய பட்டு ஜவுளி ஷோரூம் (A/C)



நவராத்திரி, தீபாவளி
மற்றும் திருமணத்திற்கு
தேவையான அனைத்துரக
பட்டு ஜவுளிகளும்,
பாவாடை ரகங்களும்
நூல் ஜவுளிகளும்
குறைந்த விலையில்
சிறந்த ரகங்கள்
கிடைக்குமிடம்



**மகாலட்சுமி சில்க்ஸ்**

(முருகன்
கல்யாண
மண்டபம்
காம்ப்ளக்ஸில்)
13/1, தெற்கு
போக் ரோடு,
தி.நகர்,
சென்னை-17.
தொலைபேசி :
444664.





25

ஆரோக்கிய ரகசியம்:
வி. என். குமாரசாமி.

# மத்ஸ்யாசனம்

விரிப்பில் பத்மாசனத்தில் உட்காரவும் பின்பக்கம் மெதுவாகச் சாய்ந்து பத்மாசனத்தைக் கழற்றாமலே படுத்துக் கொள்ளவும். தோள் பட்டைக்கு மேல் பக்கம் இரண்டு கைகளால் தரையை ஊன்றிக் கொண்டு, கழுத்தை வளைத்து, மார்பு, இடுப்பு மேலே வில் போல் தூக்கி, பின்னுக்கு வளைத்து, தலையின் உச்சி தரையில் பட வைக்கவும். பிறகு கைகளை முன்னுக்குக் கொண்டு வந்து, தொடைகளின் மேல் இருக்கும் கால் பெரு விரல்களைப் படத்தில் உள்ளபடி பிடித்துக் கொள்ளவும். இரண்டு முழங்கால்களும் தரையில் ஒட்டியிருக்க வேண்டும். வாய் மூடியிருக்க வேண்டும். வாயின் வழியே சுவாசிக்கக் கூடாது. மூக்கின் வழியேதான் சுவாசிக்க வேண்டும். தாராளமாய் மூச்சை இழுக்கவும் விடவும் செய்யலாம்.

இந்த ஆசனத்தைச் சாதகர்கள் சர்வாங்காசனத்தைச் செய்யும் நேரத்தில் நான்கில் ஒரு பாகம், அதாவது கால் பங்கு நேரம் செய்ய வேண்டும். பத்து நிமிடங்கள் சர்வாங்காசன நிலையில் இருப்பவர்கள் இரண்டரை நிமிஷம் மத்ஸ்யாசன நிலையில் இருக்கலாம். அதற்கு மேல் வேண்டாம். இதையும் எடுத்த எடுப்பிலேயே சாதிக்க முடியாது. அரை நிமிஷம், முக்கால் நிமிஷம், ஒரு நிமிஷம் என்று ஒவ்வொரு நாளும் நேர அளவை அதிகரித்துக் கொண்டே போகலாம். தேவையெனில் இரண்டு தடவைகளில் செய்து அவரவர் நேரத்தைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். ஆனால் இதைவிட படிப்படியாக நேரத்தை அதிகரித்து, ஒரே தடவையில் செய்வதே சிறந்தது.

சிலருக்குப் பத்மாசனமே போட வராது. அவர்கள் மத்ஸ்யாசனம் செய்ய முடியாது என்பதில்லை. சாதாரணமாய்க்



கால்களை மடக்கி உட்கார்ந்து, பிறகு மல்லாந்து படுத்துக் கைகளைத் தோள் அருகே ஊன்றி, மார்பு இடுப்பை உயரத் தூக்கி வளைத்து, உச்சந்தலையைத் தரையில் ஊன்றலாம். ஆனால் இதுதான் சுலபம் என்று பத்மாசனம் போடும் முயற்சியை விட்டு விடக் கூடாது. சரியாகச் செய்யப் பிரயத்தனப்பட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

சிலருக்குப் பத்மாசனம் போட்டுப் படுத்தால் மடக்கின கால்கள் அப்படியே உயரே தூக்கிக் கொள்ளும். தரையில் படியாது. நாளுக்கு நாள் முயற்சியில் முன்னேறி, மார்பை நன்கு தூக்கி, தலையை வளைத்து, உச்சந்தலையைத் தரையில் ஊன்றினால் கால்களும் தரைப்பக்கம் இறங்கும். நாளடைவில் சரியான நிலை வந்துவிடும்.

ஆரம்பத்தில் முதுகெலும்பின் நடுப் பாகம், தொடை நரம்புகள், கழுத்து முதலியன சிறிது வலிப்பதாகத் தோன்றும். நாளடைவில் சரியாகி விடும். வலிக்க வலிக்க முரட்டுத்தனமாகச் செய்யக்கூடாது. நிறுத்தி, மறுபடி முயன்று, படிப்படியாக முன்னேற வேண்டும். இன்றே புகைப்படத்தில் உள்ளது போல் செய்துவிட அவசரப்படக்

கூடாது. படத்தில் உள்ளபடி நூறு சதவீதம் சரியாகச் செய்தால்தான் பலன் என்று எண்ணவும் கூடாது. முயற்சிக்கு ஏற்பப் பலன் உண்டு. 25 சதம் சரியாகச் செய்தால் அதற்குரிய பலன், 75 சதம் சரியாகச் செய்தால் 75 சதம் பலன் என்று இப்படி ...

முக்கியமான அம்சம் மார்பு மேலே தூக்கி உள்ளேயிருக்கும் நுரையீரல்களை நன்றாய், தாராளமாய் விரியச் செய்வதே. பிறகு கால்களைப் பற்றிக் கவனிக்க வேண்டும். கால்களைச் சரியானபடி வைப்பதில் நரம்புகளுக்குப் பலன் உண்டு என்பதால் அதையும் விட்டு விடாமல் வசப்படுத்த முயற்சி செய்ய வேண்டும். மேலும் கால்கள் சரியான நிலையில் இருந்தால்தான் நெஞ்சும் நன்றாக விரியும், உயரும்.

இந்த ஆசனத்தில் கவனிக்க வேண்டிய இன்னொரு முக்கிய விஷயம், மூச்சு விடுதல். சிலருக்குக் கழுத்தைப் பின்புறம் திருப்பியதுமே வாய் 'ஆ' வென்று திறந்துவிடும். இதை அனுமதிக்கக் கூடாது. கவனம் செலுத்தி வாயை நன்றாக மூடிக் கொள்ள வேண்டும். அதற்காக உதடுகளை வாய்க்குள் தள்ளிப் பற்களால் இறுக்கி அழுத்திக் கொள்ளவும் கூடாது. இயல்பாக இரு உதடுகளையும் சேர்த்து இருக்கச் செய்து, மூக்கால் மட்டுமே வாங்கி, விட வேண்டும்.

மத்ஸ்யாசனம் பழகும் போது ஆரம்ப நிலையில் கைகளால் கால் விரல்களைப் பிடித்துக் கொள்ள முடியாது; எட்டாது. அப்போது கைகளை வெறுமனே தொடைகள் மீது வைத்திருந்தால் போதும். பழகப் பழகப் பிடிப்பு விட்டுப் போய் எல்லாம் சரியாகச் செய்ய வரும்.

'நிமிர்ந்து உட்கார், நிமிர்ந்து நட' என்று கூறுவதெல்லாம் தன்னம்பிக்கையை உணர்த்த மட்டுமல்ல; நுரையீரலுக்கு நிறைய பிராண வாயு கிடைக்கவும்தான். சுவாசக் காற்று நுரையீரல்களில் தாராளமாய் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று பரவினால்தான் ரத்தத்தில் நிறையப் பிராண வாயு சேரும். அது, உடலின் எல்லாப் பாகங்களுக்கும் ரத்த ஓட்டத்தினால் எடுத்துச் செல்லப்பட்டு, நற்பலன்களைத் தரும். உட்காரும் போதெல்லாம் பத்மாசனத்தில் உட்காருவது நல்லது. புஜங்காசனத்திலும் நுரையீரலுக்கு நிறையப் பிராண வாயு கிடைக்கிறது. மத்ஸ்யாசனத்தில் இன்னும் தாராளமாகக் கிட்டும்படி, நுரையீரல் தாமரை போல் விரிந்து மலர்கிறது. நுரையீரலின் நுண்ணிய சந்து பொந்தெல்லாம் சுத்தமடைகிறது. ரத்தத்தையும் சுத்தப்படுத்துகிறது. நுரையீரலைப் பாதிக்கக் கூடிய எந்த வியாதியும் பிராண வாயுவுக்குப் பயந்து ஓடியே போய்விடுகிறது!

வீட்டிலே அலமாரிக்கு அடியில் தினந்தோறும் பெருக்காமல் விட்டு வைத்தால் என்ன ஆகும்? தூசி தும்பு சேரும், அழுக்கு படியும், ஒட்டடை, கேசச் சுருள்கள் எல்லாம் இருக்கும். பல்லி, கரப்பான் போன்றவை வாசம் புரியத் தொடங்கும். அப்படித்தான் நம் நுரையீரல்களும். நல்ல காற்றை நிரப்பி, அழுக்கும் கிருமிகளும் சேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். துடைப்பமென்ன, வாக்குவம் கிளீனரே போட்டுப் பெருக்கித் துடைத்துச் சுத்தப்படுத்தியது போலாகி விடும் நம் நுரையீரல், ஒழுங்காக மத்ஸ்யாசனம் செய்து வந்தால்.

(தொடரும்)

படம்: **உத்ரா.**

உதவி:

**சிவானந்த யோக வேதாந்த கேந்திரம்.**




— ஆர். ரத்னசாமி.

டாக்டர் பதில்கள்:

# போதைப் பொருள் உடலில் எந்த பாகத்தைத் தாக்கும்...?




● கு. நெப்போலியன், மணக் கரம்பை.

ஹெராயின் போன்ற போதைப் பொருட்கள், உடலின் எந்த பாகத்தைத் தாக்குவதால், அப்போதைப் பொருட்களிடம் அடிமைத்தனத்தைத் தோற்றுவிக்கிறது?

● டாக்டர் ரேவதி அனந்த், ஏ. வி. ஹாஸ்பிடல், சென்னை — 18.

போதைப் பொருட்கள், நரம்பு மண்டலத்தைத்தான் பெருமளவில் பாதிக்கின்றன. போதையில் சுய நினைவற்று இருப்பதால் ஏற்படும் விளைவுகள் பயங்கரமானவை. உதாரணமாக, போதைப் பொருள் உட்கொள்ளுவதால், பசி மறக்கடிக்கப்பட்டு, போதிய ஆகாரம் இல்லாது போய், கடைசியில் மகோதரம் போன்ற வியாதியில் முடியலாம். நரம்புத் தளர்ச்சி கடுமையாகிப் போகலாம். போதை தரும் மயக்கத்தில் தகாத பாலுறவு கொள்ளுவதால் பால்வினை நோய்கள் தாக்கலாம். போதைப் பொருட்களைத் தாங்களாகவே செலுத்திக் கொள்ளுவதால் எய்ட்ஸ் போன்ற நோய்கள் வரலாம். கருச்சிதைவு ஏற்படலாம். போதைப் பொருட்கள் மிக மிக அபாயகரமானவை.

● எஸ். தணிகாசலம், பவானி (பரிசு பெற விலாசம் அனுப்பவும்):

Varicose Veins என்பது என்ன? இது காலில் ஏற்பட்டுள்ளதால் என்ன பாதிப்புக்கள் ஏற்படலாம்? இதற்கு எப்படிச் சிகிச்சை செய்யலாம்?

உடலின் கால் பகுதியில் அசுத்த ரத்தத்தை எடுத்துச் செல்லும் ரத்த நாளங்களின் வால்வுகள் திறம்படச் செயல்படாது போகுமானால் ரத்தம் தாமதமாக இதயத்தை நோக்கிச் செல்லும். இந்தத் தேக்கத்தால், கால்களில் முடிச்சுக்கள் போன்று அல்லது கொத்துக் கொத்தாகக் கொடி போன்று, நீல நிறத்துடன், தெரியும். இந்தத் தேக்கத்தால் கால் வலியோடு, வெளிப்படையாக அதன் மீது புண்ணும் வரக் கூடும். நீரிழிவு உள்ளவர்களுக்கு, இந்த நோய் ஏற்பட்டால், ஆரம்பத்திலேயே தீவிரமாகக் கவனிக்க வேண்டும். அதிக நேரம் நின்று கொண்டே இருப்பவர்களுக்கு ஆடு சதையில் இப்படி முடிச்சுக்கள் உண்டாக நேரும். அதனால் தான், அதிக நேரம் நிற்கும் போலீஸ்காரர்கள் இறுக்கமான காலுறை அணிந்து கொள்கிறார்கள். கடமை காரணமாக, அதிக நேரம் நிற்பதைத் தவிர்க்க முடியாதவர்கள் அதற்கு மாற்றாகச் சில தேகப் பயிற்சிகளைச் செய்யலாம். காலில், கணுக் காலுக்கு மேல் எலாஸ்ட்டோ க்ரீப் பாண்டேஜ் கட்டிக் கொள்ளலாம். (கர்ப்பத்தின் போது சில தாய்மார்களுக்கு வெரிகோஸ் வெய்ன்ஸ் தோன்றும். அதற்கும் இந்த பாண்டேஜ் கட்டுவது நல்லது.) இதற்குத் தகுந்த அறுவைச் சிகிச்சையும் உண்டு.

தொகுப்பு: எஸ். வி. என்.


பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# நினைவிருக்கட்டும், வைட்டமின் மற்றும் மினரல் பற்றாக்குறையால் உங்கள் குழந்தை அவதிப்படாமலிருக்க, ஊட்டச்சத்துமிக்க சமநிலை உணவு தேவை.

## "ஆகவேதான் என் குழந்தைக்கு செரிலாக் தருகிறேன்."

உங்களுக்குத் தெரியுமா, சமச்சீராக உள்ள வைட்டமின்களும், மினரல்களும் ஊட்டச்சத்துகளை உறிஞ்ச உதவுகின்றன என்பது? போஷாக்குப் பற்றாக்குறையினால் குழந்தை அவதிப்படாமலிருக்க இது வகை செய்கிறது.

உங்கள் டாக்டரைக் கேளுங்கள். இந்த வைட்டமின்களையும் மினரல்களையும், போஷாக்குச் சத்துகள் சமச்சீராக உள்ள உணவின் மூலம் பெறுவதுதான் சிறந்த வழி என்பார். அந்த உணவில், புரோட்டீன்கள், கார்போஹைட்ரேட்கள், கொழுப்பு, இரும்பு மற்றும் கால்ஷியம் சத்துகளும் சரியான விகிதத்தில் இருக்கவேண்டும். ஒவ்வொரு வேளை உணவிலும், ஒவ்வொரு நாளும்!

வழக்கமான உணவுகள் மூலம் இந்த எல்லா சத்துக்களையும் தருவது பெரும்பாலான தாய்மார்களுக்கு எளிதல்ல.

இதற்குத் தீர்வு?

செரிலாக். குழந்தைகளுக்கு நான்கு மாதம் முதல் வெறும் பால் உணவு மட்டும் போதாது. ஆகவே அப்போது முதல் தரக்கூடியது, ஊட்டச்சத்துக்களைச் சமச்சீராகக் கொண்ட திட உணவான செரிலாக்.

செரிலாக் ஏ, டி, சி, பி காம்ப்ளெக்ஸ் மற்றும் ஈ வைட்டமின்களால் செறிவூட்டப்பட்டிருக்கிறது. மேலும், இதில் புரோட்டீன், கார்போஹைட்ரேட்கள், கொழுப்பு, இரும்பு மற்றும் கால்ஷியம் சத்துக்களும் உள்ளன-அனைத்தும் சரியான விகிதத்தில், குழந்தைகள் மிகவும் விரும்பும் சுவையுடன்!

ஆகவே போஷாக்குச் சத்துகளைச் சமச்சீராகக் கொண்ட செரிலாக் அனுகூலத்தை உங்கள் குழந்தைக்கு அளிக்கத் துவங்குங்கள். குழந்தைக்கு 6 மாதம் ஆனதும் வீட்-ஆப்பிள், வீட்-ஆரஞ்சு, மற்றும் வீட்-வெஜிடபிள் ஆகியவற்றின் கூடுதல் அனுகூலங்களை அளியுங்கள்.

பேக்கின் மீதுள்ள விதிமுறைகளைப் பின்பற்றுக.

இலவசம்: செரிலாக் பேபி கேர் புத்தகம்

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு




**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக்.**

REGISTERED NO. M. 4392

Mudra D:NES 0019 TAM